உ

சிவமயம்.

# காசியமகவந்தாதி

மூலமும் உரையும்.

பாண்டிநாட்டிலுள்ள
சோதிவனத்துட்சேர்ந்த
தேவிகோட்டையின்கண்
மாற்றூர்க்கோயில்
உறையூர் வதுப்பு
வீர. இலக்குமணச்செட்டியாரவர்கள்
குமாரர்
இலக்குமணச் செட்டியாராகிய
சிந்நயச்செட்டியாரவர்களால்
இயற்றப்பெற்றன.


இவை
அவர்கள்மாணுக்கர்
மேற்படியூர்
அள. சுப. சு.
சுப்பிரமணியச்செட்டியாரவர்களால்
சென்னபட்டணம்
வித்தியாநுபாலனயந்திரசாலையில்
அச்சிற்பதிப்பிக்கப்பட்டன.
பிலவஞு புரட்டாதிமீ.

K. R. Press. Madras.

உ

சிவமயம்.

# நூலாசிரியர்பெயர்.

நூலாசிரியர் மாணாக்கராகிய

தேவிகோட்டை மாற்றூர்க்கோயில் உறையூர்வகுப்பு

அள. சுப. சு.

சுப்பிரமணியச்செட்டியாரவர்கள்

இயற்றியது.

---

வாசியம நவ்வெழுத்தில் விலக்குநவாங் குநமன்
வாழ்விப்ப முடிப்பவிவை மறைமுதலின் வடிவால்
வீசியம ணைத்தொலிசீர் ஞாலமுய்ய வருளார்
விமலையொடு விசுவேசர் விளம்புபதே சத்த
வாசியம பீடையொரீஇ யருளுருவம் வழங்கி
வாராவின் பருளுமா நந்தவன வாய்மைக்
காசியம கவந்தாதி கட்டுரைத்தான் றேவைக்
காவலன்சிந் நயவணிகப் பாவலவ ரேறே.

---

உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

# காசியமகவந்தாதி

## மூலமும் உரையும்.

### காப்பு.

சீர்மன்னு தன்னரு ளூற்றரு காமையிற் றெள்ளமுத
நீர்மன்னு நந்தனி நெஞ்சத் தடத்து நிலவுங்குலாய்
நார்மன்னு நற்புத்தி சித்திப் பிடிகளை நாளுந்தழீஇ
யேர்மன்னு பேரின்பக் கான்மேவு துண்டி யிளங்களிறே.

இதன்பொருள். நார் மன்னு நல் புத்தி சித்திப் பிடிகளை நாளும் தழீஇ - அன்புமிக்க நல்ல புத்தியுஞ் சித்தியுமாகிய பெண்யானைகளை யென்றுஞ் புணர்ந்து—ஏர் மன்னு பேர் இன்பக்கான் மேவு - அழகுதங்கிய பெரிய ஆநந்தவனத்திலிருக்கின்ற—துண்டி இளம் களிறு - துண்டிவிநாயகனெனப்பெயரிய தருணத்தினையுடைய ஆண்யானையானது—சீர் மன்னு தன் அருள் ஊற்று அருகாமையின் - சிறப்புப்பொருந்திய தனது கருணையசும்பு குறையாததன்மையால்—தெள் அமுதம் நீர் மன்னு - தெளிந்த அமிர்தம்போன்ற நீர் நிலைபெற்றுள்ள—நம் தனி நெஞ்சம் தடத்தும் குலாய் நிலவும் - நமது ஒப்பற்ற மனமென்றுசொல்லப்படுந் தடாகத்தினும் விளையாடி விளங்கும். என்றவாறு.

புத்தியுஞ் சித்தியும் விநாயக சத்திகள்.

---

## நூல்.

வாரண வாசி மணித்தேரென் றிவ்வொலி மண்டுதெரு
வாரண வாசி வளரகி லேச வரைபுரையும்
வாரண வாசி னகிற்றடங் கண்ணி வரபவநி
வாரண வாசி யமைந்துடை யாயென்முன் வந்தருளே.

இ - ள். வாரண வாசி மணித் தேர் என்று இவ் ஒலி மண்டு தெரு - யானை குதிரை அரதனத்தாலியன்ற இரதம் என இவற்றது ஆரவாரமிக்க வீதிகளையுடைய—வாரணவாசி வளர் அகிலேச - காசிப்பதியில் வாழ்கின்ற விச்சுவநாதனே—வரை புரையும் வார் அணவு ஆசு இல் நகில் - மலைபோன்ற கச்சைப்பொருந்திய குற்றமில்லாத முலைகளையுடைய—தடம் கண்ணி வர - விசாலாட்சியம்மைக்கு நாயகனே—பவம் நிவாரண - பிறவியை நீக்குபவனே—ஆசியம் ஐந்து உடையாய் - திருமுகத்தை யைந்தாகவுடையோனே—என் முன் வந்தருள் - எனக்கு நேரே தோன்றியருள்வாயாக. எ - று.

ஆசியமைந்து என்பதற்கு நகைவலி யென்பதும் ஒன்று. வாரணவாசி வடநூன் முடிபு. (க)

வந்தனஞ் செய்யுள் விளையா டவிமுத்த வாணன்வைய
வந்தனஞ் செய்யுந் திறந்தீர்த் திரங்கிய வள்ளல்கழல்
வந்தனஞ் செய்யும் பெரும்பேறு பெற்று மனம்பதித்து
வந்தனஞ் செய்யுள் வகையால் வழுத்தினம் வாழ்ந்தனமே.

இ - ள். வந்து அனம் செய்யுள் விளையாடு அவிமுத்த வாணன் - புகுந்து அன்னப்பறவைகள் வயலில் விளையாடு தற்குக் காரணமான காசியின்கண் வாழ்வோன்—வையம் வந்தன் அஞ்சு எய்யும் திறம் தீர்த்து இரங்கிய வள்ளல் - தேராகிய காற்றையுடைய மன்மதன் பஞ்சபாணத்தை ஏவுந்தன்மையை (முன்னர்) நீக்கிப் பின்னர்க் கருணைகூர்ந்தருளிய

வள்ளியோன்—கழல் வந்தனம் செய்யும் பெரும் பேறு பெற்றும் - அவனது திருவடிகளை வணங்கும் பெரிய பயனைப் பெற்றோம்—மனம் பதித்து உவந்தனம் - அவற்றை மனத்தி லிருத்தி மகிழ்ந்தோம்—செய்யுள் வகையால் வழுத்தினம் வாழ்ந்தனம் - அல்லதூஉம், கவிகளின் வகையாலே துதித்தோம், ஆகலின் வாழ்வுடையேமாயினேம். எ - று. (உ)

தனதனை யன்ன வயனாவற் கோவைத் தழீஇமகிழ்சே
தனதனை யன்ன சுராந்தக னாகிய சண்முகநா
தனதனை யன்னசம் பூரணி கேள்வ தனிவிடைக்கே
தனதனை யன்ன தடங்காசி வாசி சரணுனக்கே.

இ - ள். தனதனை அன்னம் வயல் நாவல் கோவைத் தழீஇ மகிழ் சேதன - குபேரனையும் அன்னந்தங்கிய வயல் சூழ்ந்த திருநாவலூரிலவதரித்த சுந்தரமூர்த்திநாயனாரையுந் (தோழராகத்) தழுவி மகிழ்கின்ற ஞானசொரூபியே—தனயன் அசுர அந்தகன் ஆகிய சண்முகன் நாதனது அனை அன்னசம்பூரணி கேள்வ - குமாரனும் அசுரர்க்குக் காலன் போல்வானுமாகிய ஆறுமுகக்கடவுளது தாய் அன்னபூரணியம்மை யவளுக்கு நாயகனே—தனி விடைக் கேதன - ஒப்பற்ற இடபக்கொடியையுடையோனே—தனை அன்ன தடம் காசி வாசி உனக்குச் சரண் - தன்னைத்தானேயொத்த பெரிய காசியின்கண் வசிப்பவனே உனது அடைக்கலம் யான். எ - று. (௩)

சரவண மைந்த மருங்கண்ணி யர்க்குத் தளர்ந்தழிவீர்
சரவண மைந்தன் மழலைக் குருகுந் தகையரகோ
சரவண மைந்தன் பொருளாய் வாகந் தவனமகே
சரவண மைந்த நியம நியமத்திற் சார்ந்துய்யுமே.

இ - ள். சரம் வணம் மைந்து அமரும் கண்ணியர்க்குத் தளர்ந்து அழிவீர் - அம்பின் றன்மையும் வன்மையும் பொருந்

திய விழியையுடைய மாதர்பொருட்டு மெலிந்து வருந்தும் மனிதர்காள்—சரவணம் மைந்தன் மழலைக்கு உருகும் தகையர் - சரவணத்தின்கட்டோன்றிய குமாரனது இளஞ்சொல்லுக்கு மனங்கனியுந் தகுதியினர்--அகோசரம் வணம் ஐந்தன் பொருள் ஆய ஆநந்தவனம் மகேசர் - (கரணத்தாற் சென்று) அறியப்படாத எழுத்து ஐந்தனது அருத்தமாகிய காசிமகேச்சுவரர்—அவண் அமைந்த நியமம் நியமத்தில் சார்ந்து உய்யும்-அவர் அவ்விடத்து எழுந்தருளியிருக்கின்ற திருக்கோயிலை ஒழுக்கத்தோடு அடைந்து (தரிசித்துப்)பிழைமின்கள். எ-று.

சாரத் தகுவது சைவமென் றெண்ணித் தறுகட்டுரா
சாரத் தகுவர் பெறலருங் காசித் தலஞ்சென்றுதேன்
சாரத் தகுவளை தோய்கங்கை தோய்ந்துநஞ் சம்புவைத்துஞ்
சாரத் தகுவடு வில்வளைத் தாயென்ப சாதுக்களே.

இ-ள். சாரத் தகுவது சைவம் என்று எண்ணி - அடையத்தக்கது சைவசமயமேயென நினைத்து—தறுகண் துராசாரம் தகுவர் பெறல் அலரும் காசித்தலம் சென்று-அஞ்சாமையினையுந் தீயொழுக்கத்தையுமுடைய அசுரர்போலுங் கொடியோராற் பெறுதற்கரிய காசிப்பதிக்கட் போந்து—தேன் சாரத்த குவளை தோய் கங்கை தோய்ந்து - மதுரசத்தையுடையனவாகிய உற்பலமலர்கள் பொருந்திய கங்காநதியின்மூழ்கி—நம் சம்புவைத் துஞ்சார் அத்த குவடு வில் வளைத்தாய் என்ப சாதுக்கள் - நம்து சிவபிரானை அமரர்தலைவனே மலையை வில்லாக வணக்கினவனே என்று துதிப்பர் நல்லோர். எ - று. தகுவர் உவமவாகுபெயர். (௫)

துக்கஞ் சுகத்தின் முனையதில் காசிச் சுயம்புவெல்வ
துக்கஞ் சுகத்தில்வந் தானைப் பொடித்தவன் ரேலிசைபு
துக்கஞ் சுகத்தினன் பாலளி யேகங்குல் சோர்ந்துளமா
துக்கஞ் சுகத்திற் பெருகிற் றெனுவொரு சொல்லியம்பே.

இ - ள். துக்கம் சுகத்தில் முனையது இல் காசிச் சுயம்பு-துன்பவின்பத்துள் முதலிற்சொற்றதாய துன்பமில்லாத காசியினிடத்துத் தானேமுளைத்தோன்—வெல்வதுக்கு அம் சுகத்தில் வந்தானைப் பொடித்தவன் - வேறற்பொருட்டு அழகிய கிளிப்பரியில் வந்த மதனனைச் சாம்பராக்கினுன்—தோல் இசை புதுக் கஞ்சுகத்தினன்பால்-(வாமனனது)தோலாலிணக்கிய புதிய சட்டையையுடையான், அவன் மாட்டு—அளியே சோர்ந்துள மாதுக்குக் கங்குல் அஞ்சு உகத்தின் பெருகிற்று எனு ஒரு சொல் இயம்பு - வண்டே (காமத்தாற்) றளர்ச்சியுற்றிருக்கின்ற எம்பெண்ணுக்கு ஓரிரவு ஐந்துயுகத்தினும் நீண்டதென்று ஒரு வாக்கியத்தைச் சொல்வாயாக. எ - று.

இயம்பல வாயினன் ருர்க்கின்ற காசி யிறைவசின்ம
யியம்பல வாயின கட்குழ லாள்பங்க விட்டிவிட
யியம்பல வாயின தீத மறையுமிற் றென்றுன்னிலை
யியம்பல வாயின வென்னினெய் யேன்செப்பல் யாங்கனமே.

இ - ள். இயம் பல வாயில் நன்று ஆர்க்கின்ற காசி இறைவ - வாச்சியம் பலவிடத்தும் பெரிதுமுழங்குதற்கிடமான காசிநகர்த்தலைவனே—சின்மயி - ஞானவடிவினள்—அம்பு அல் அவாயின கண் குழலாள் - பகழியும் இருளும் விரும்பத்தக்க விழியையுங் கூந்தலையுமுடையாள்—பங்க - அவள்பாக—இட்டி விடயி - யாகநுதலியபொருளாயுள்ளோனே—அம்பல - சிற்றம்பலத்தையுடையாய்—வாயின் அதீத - வாசாமகோசர—உன் நிலை இற்று என்று மறையும் இயம்பல வாயின என்னில் - உனது நிலைமை இத்தன்மைத்தென வேதங்களுங் கூறுதற்கு ஆற்றலிலவாயின வென்றால்—நொய்யேன் செப்பல் யாங்கனம் - சிற்றறிவுடையேன் சொல்லுதல் எவ்வாறு கூடும். எ - று. (எ)

கனத்த தனத்த மலையாக வாங்குங் கரதலக
கனத்த தனத்த மலைபாக மல்கிய காசிமன்மோ

கனத்த தனத்த மலையாக வென்மின் கலர்களைக்கா
கனத்த தனத்த மலையாக னுமெனுங் கைதவரே.

இ - ள். கலர்களைக் காகன் அத்த தனத்து அமல் ஐயா கனு எனும் கைதவர் - கீழ்மக்களைக் காக்கைவாகனன்றந் தையாகிய சூரியனே பொருளால் நெருங்கப்பெற்ற குபேர னே கன்னனே என்று புகழும் வஞ்சகர்காள்—அத்தம் மலை கனத்த தனு ஆக வாங்கும் கரதல - பொன்மலையைப் பார வில்லாக வளைத்த கையையுடையோய்—ககனத்தது அனத் தம் அலை யாகம் மல்கிய காசி மன் - வானூட்டினது வறுமை யைக் கெடுக்கின்ற வேள்வி மிக்க காசியிறைவ—மோகனத்த தனத்து அமலை ஆக என்மின் - களிப்பைத்தருவனவாகிய முலைகளைக்கொண்ட உமாதேவிபொருந்திய திருமேனியனே என்றுகூறித் துதியுங்கள். எ - று. (அ)

கைதவத் தான வணங்கியைச் செற்றவன் கந்தவந
கைதவத் தான வவாவெனு மப்பன் கடும்பரித்தொ
கைதவத் தானவம் பூற்றுங் கிரிதிரி காசிப்பெம்மான்
கைதவத் தானவன் போல்வேலை யாண்டதென் காசினிக்கே.

இ - ள். அவண் அங்கியைக் கை தவச் செற்றவன் - அந்தத் தக்கயாகத்தினிடத்து அக்கினியைக் கைநீங்க முனிந்தவன்—கந்த அநகை தவத்து ஆனவ வா எனும் அப்பன் - கந்தனே பாவமில்லாத உமாதேவியினது தவத்தால் உண் டாயவனே வருவாயாகவென்று (குமாரக்கடவுளை) யழைக் குந் தந்தை—கடும் பரித் தொகை தவத் தானம் அம்பு ஊற்றும் கிரி திரி காசிப் பெம்மான் - விரைவாகிய குதிரைத்தொகுதி யும் மிக மதநீரைப் பொழிகின்ற மலைபோலும் யானைகளும் வழங்குதற்குக் காரணமான காசியிற்பெருமான்—காசினிக் குக் கைதவம் தானவன் போல்வேலை ஆண்டது என் - அவன் பூமியின்கண் வஞ்சகத்தோடுகூடிய அசுரன்போலுங்

கொடியேனை ஆட்கொண்டது யாதுகாரணம். எ - று. தான் அசை. (கூ)

காசி னகர முதலை யுடையைந்தென் காதிற்சொற்றுக்
காசி னகர முதலையுட் பெற்றவன் கற்பவெள்ளங்
காசி நகர முதலை யுரு மற் கடிந்திடுமெ
காசி னகர முதலையுண் சேய்தந்த காவலனே.

இ - ள். முது அலையுள் சினகரம் பெற்றவன் கற்பம் வெள்ளம் - முதிய பாற்கடலினுள்ளே கோயில்கொண்ட திருமாலினது கற்பத்தெழுவதோர் வெள்ளத்தின்கண்—காசி நகர் அமுதலை உருமல் கடிந்திடும் மகா சின - காசிப்பதி அமிழ்ந்தாவண்ணம் அவ்வெள்ளத்தை நீக்கும் பெரிய வெகுளியையுடையாய்—கரா முதலை உண் சேய் தந்த காவலனே - கராவாகிய முதலையால் உண்ணப்பட்ட பனவச்சிறுவனைச் (சுந்தரமூர்த்திநாயனூர்பொருட்டு உயிர்ப்பித்துத்) தந்தருளிய எப்பொருட்குமிறையவனே—காசு இல் நகரம் முதலை உடை ஐந்து என் காதில் சொற்றுக் கா - குற்றமில்லாத நகரமாகிய முதலெழுத்தையுடைய ஸ்ரீபஞ்சாக்கரத்தை எனது செவியில் உபதேசித்துக் காத்தருள்வாயாக. எ - று. (க0)

காவியங் கற்கண் மறலி யெனைநற் கதிக்குப்பத
காவியங் கற்க நிரயஞ்செ லென்னுமுன் கைக்கொள்கருங்
காவியங் கற்க வருவிழி பாக கழகஞ்சிறூர்
காவியங் கற்க நகுகாசி மன்னிக் களிப்பவனே.

இ - ள். அங்குக் கருங்காவி அற்க வரு விழி பாக-அவ்விடத்தே கருங்குவளையின்றன்மை நிலைபெறச் சலிக்கின்ற விழியையுடைய உமாதேவி பாகனே—கழகம் சிறூர் காவியம் கற்க நகு காசி மன்னிக் களிப்பவனே - கல்விச்சாலைகள் சிறுவர் பெருநூலைக் கற்றலால் விளங்குகின்ற காசியின்கண்

ணே தங்கிமகிழ்வோய்—காவியங்கல் கண் மறலி - காவிக் கல்லையொத்த செங்கண்ணையுடைய இயமன்—எனைப் பதகா நல் கதிக்கு இயங்கற்க நிரயம் செல் என்னும் முன் - என்னை நோக்கிப் பாவீ நீ நல்ல பதவியின்கட் செல்லாதொழிக நரகத்தின்கட் செல்லுதி என்று சொல்லுதற்குமுன்னே—கைக் கொள் - ஆட்கொண்டருள். எ - று. (கக)

பவளங் கடுக்கு மவிழ்வார் சடையர் பலருமிக்கின்
பவளங் கடுக்கு மவிமுத்தர் வாமத்துப் பார்முற்றளிப்
பவளங் கடுக்கு மவியா முதல்வர் பதநினைதிட்
பவளங் கடுக்கு மவிர்முலை யார்க்கெய்த்த பாவிநெஞ்சே.

இ - ள். திட்பம் வளம் கடுக்கும் அவிர் முலையார்க்கு எய்த்த பாவி நெஞ்சே - வலிமையையுடைய கிண்ணம்போன்ற விளங்குகின்ற கொங்கையையுடைய மங்கையர்பொருட்டு இளைப்புற்ற தீயதாகிய மனமே—பவளம் கடுக்கும் அவிழ் வார் சடையர் - பவளக்கொடியை முனிகின்ற கட்டவிழ்ந்து நீண்ட சடையினையுடையார்—பலரும் இன்பம் வளங்கள் மிக்குத் துக்கும் அவிமுத்தர் - பல்லோரும் இன்பத்தோடு கூடிய செல்வங்களை நிரம்ப நுகர்தற்கிடமாகிய காசிப்பதியினர்—பார் முற்று அளிப்பவள் வாமத்து அங்கு அடுக்கும் அவியா முதல்வர் பதம் நினை - உலகமுழுதும் ஈன்று காக்கும் உமாதேவி இடப்பாகமாகிய அவ்விடத்துத் தங்கப்பெற்ற கெடாத தலைவர், அவரது திருவடியைச் சிந்திப்பாயாக. எ - று. (கஉ)

பாவிக் கரும்பனை யக்கன்னி நீகிட்டு பாயமென்றே
பாவிக் கரும்பனை சேர்பணைக் காசியைப் பாலிக்குநம்
பாவிக் கரும்பனை மேற்றங்கு மன்றிலைப் பாழ்ங்கடலைப்
பாவிக் கரும்பனை வைவது மின்றிப் பதைப்பறுமே.

இ - ள். பாவு இக்கு அரும்பு அனை சேர் பணைக் காசியைப் பாலிக்கும் நம்பா - பரவிய கரும்பும் பூவரும்பும் அனையென்னும்மீனும் நெருங்கிய மருதநிலத்தாற்சூழப்பட்ட காசி நகரத்தைக் காக்கின்ற நம்பனே—பாவிக்க அரும் பல் நயம் கன்னி நீ கிட்டு உபாயம் என்றோ - நினைத்தற்கரிய பலநயத்தையுடைய எம்மாது நீ வருதற்குரிய உபாயச்செயலென்றெண்ணியோ—இக் கரும் பனைமேல் தங்கும் அன்றிலை - இந்தக் கரிய பனைமரத்தின்மீது வைகும் அன்றிற்புள்ளையும்—பாழ் கடலை - (உல்குக்குப்பயப்படாது) பாழ்பட்ட கடலையும்—பாவிக் கரும்பனை - பாவியாகிய கருப்புவில்லையுடைய மன்மதனையும்—வைவதும் இன்றிப் பதைப்பு அறும் - இகழ்வதும் இல்லாது துடிப்பற்றுக் கிடக்கின்றாள். எ - று. (கஅ)

பதைக்க வருமை யமன்றனக் கென்செய்வல் பத்தர்கொடுப்
பதைக்க வருமை யமன்றலங் காசிப் பரம்பரதற்
பதைக்க வருமை யமன்ற வுருமை பரிக்குமதி
பதைக்க வருமை யமன்றனுப் பைதைக்கும் பாண்மகனே.

இ - ள். பத்தர் கொடுப்பதைக் கவரும் ஐய - அடியார் தருவதியாதானுமொன்றனை விருப்பாலேற்கின்ற ஆரியனே—மன்றல் அம் காசிப் பரம்பர - மங்களத்தையும் அழகையுமுடைய காசியின்கண் உயர்ச்சியுளுயர்ச்சியோய்—தற்பத ஐக்க - வேதாந்த மகாவாக்கியத்தினது தத் என்னும் பதத்தில் ஒன்றிநிற்பவனே—அருமை அமன்ற உருமை பரிக்கும் அதிப-அருத்தன்மையையும் அவயவம் நெருங்கிய உருத்தன்மையையுந் தாங்கிய இறைவா—தைக்க அருமைய மன்தனுப் பை தைக்கும் பாண்மகனே - பிறர்தைத்தற்கு அரிய உடம்பாகிய பைகளைத் தைக்கின்ற பாணனே—பதைக்க வரும் மை யமன்றனக்கு என் செய்வல் - உயிர் நடுங்க வருங் கரிய நமனை ஒழித்தற்கு யான் யாதுசெய்வேன்; (நான் செய

க்கிடந்தது ஒன்றுமில்லை நீயேசெய்தல் வேண்டும்.) எ - று. மன் - அசை. (கச)

மகரந் தவழுங் குழையா ரவிமுத்த மன்னுநியா
மகரந் தவழுவை யீர்ந்தவர் வெற்பிலென் மார்பிற்றைத்தம்
மகரந் தவழுந் தினநின் முலைபெண்மை மற்றெற்றினும்
மகரந் தவழு மருவா மலர்க்குழன் மாதரசே.

இ - ள். மகரம் தவழும் குழையார் - சுறுவடிவாக உலவுங் குண்டலத்தினர்—அவிமுத்தம் மன்னும் நியாமகர் - காசிக்கண் நிலைபெற்ற அகிலாண்டப்பிரேரகர்—அந்தம் வழுவை ஈர்ந்தவர் வெற்பில் - முடிவைச் செய்வதோர் யானையைப் பிளந்தோர், அவரது மலையிலே—மகரந்தம் வழு மருவா மலர்க் குழல் மாதரசே - பூந்தாதோடு கூடிய குற்றம் பொருந்தாத மலருக்கிடமாகிய கூந்தலையுடைய பெண்ணரசியே—அம்ம நின் முலை என் மார்பில் தைத்து அழுந்தின கரந்த - இதுகேள், உனது கொங்கை எனது மார்பகத்துப்பாய்ந்து அழுந்தி யொளித்தன—பெண்மை மற்று எற்றின் ஆம் - இனி உனக்குப் பெண்டன்மை வேறு எதனால் உண்டாகும். எ - று. (கரு)

அரவப் பணியை யவலம் பனம்புரி யாநந்தந்தோற்
றரவப் பணியை யவலம் பனம்புரி யாநந்தவா
வரவப் பணியை யவலம் பனம்புரி யாநந்தக்கா
னரவப் பணியை யவலம் பனம்புரி யாநந்தமே.

இ - ள். அரவம் பணியை அவலம்பனம் புரியா - நாகாபரணத்தைப் பற்றுதல்செய்து—நந்தம் தோற்றரவு அப்பு அணி ஐய - சங்குகள் தோற்றுதற்குக் காரணமான நீரை (முடியிலே) தரித்த கடவுளே—வலம் பனம்புரி ஆம் நந்தவா - திருவலஞ்சுழி திருப்பனையூருமென இவற்றில் வளரும்

நமது நாயகனே—அரவம் பண் இயைய அலம்பு அனம் புரி ஆநந்தக்கான் அர - சிலம்பினிசைபோல வொலிக்கின்ற அன்னப்புள்ளுச் சூழுதற்குக்காரணமான காசிக்கண் அரனே—அப் பணியெய அவலம் பனம் புரியாம் நந்தம் - அந்த (நாயன்மார்செய்த)திருத்தொண்டின்றன்மையைக் கவலையோடு சொல்லேம், விரும்புதலுஞ் செய்யேம், ஆகலின் யாங்கெடமாட்டேம். (அகங்காரநீங்கப்பெற்றுய்யேம் என்றபடி) எ - று.

ஆனகஞ் சத்திக்கும் வாரண வாசி யதுலவிபோ
வானகஞ் சத்திக்கு மெல்வயின்கொங்கையென்றுங்கமர்வோ
யானகஞ் சத்திக்கு மாமுகன் றுயனை யாளினிமை
யானகஞ் சத்திக்குந் தாழ்க்குதி யேற்பழி யாமுனக்கே.

இ - ள். ஆனகம் சத்திக்கும் வாரணவாசி அதுலவிபோ - பேரி முழங்குதற்குக்காரணமான காசிக்கண்ணுள்ள ஒப்பில்லாத வியாபகத்தாய்—சத்திக்கு மெல் வயின் கொங்கை ஆல் நகம் என்று ஆங்கு அமர்வோய் - உமாதேவியினது மெல்லிய வயிறும் முலையும் ஆலிலையையும் மலையையும் போல்வனவென விரும்பி அவற்றின்மாட்டு வீற்றிருப்பவனே—ஆன - இடபத்தையுடையாய்—கஞ்சம் மாதிக்கு முகன் தாய் அனையாள் - தாமரைப்பூவிற்றோன்றிய பெரிய திசைமுகனுக்கு யாயாகிய இலக்குமியன்ன நங்கை—இனிமையான கம் சத்திக்கும் - இன்சுவைத்தாய நீரையும் வாந்திசெய்கின்றாள்—தாழ்க்குதியேல் உனக்குப் பழி ஆம் - (அவள்பால் இனியும் வாராது) பாணிப்பையாயின் நினக்குக் கொலைப்பழியுண்டாகும். எ - று. (கஎ)

ஆமல கத்தினை யுந்தெரி யாய்பிறர்க் கன்பர்க்கங்கை
யாமல கத்தினை நேர்வா யவிமுத்த வத்தநித்தி
யாமல கத்தினை மேற்கொள்பொய்ந் நூல்கற்று னங்கிரியெய்
யாமல கத்தினை யாநிற்ப தீவினை யார்ச்சிதரே.

இ-ள். அன்பர்க்கு அகம் கை ஆமலகத்தினை நேர்வாய் - அன்புடையார்க்கு அகங்கைநெல்லிக்கனிபோல விளங்குப வனே—ஆம் அலகு பிறர்க்கு அத் தினையும் தெரியாய் - உள தாகிய எல்லை அன்பில்லாத மற்றையாரால் அந்தத் தினையள வும் அறியப்படாதாய்—அவிமுத்த அத்த - காசியிறைவ னே—நித்தியாமல - என்றும் பாசமில்லாதோய்—தீவினை ஆர்ச்சிதர் - பாவச்செயலையீட்டுங் கொடியோர்—கத்தினை மேற்கொள் பொய்நூல் கற்று உன் அங்கிரி அகத்து எய்யா மல் இனையா நிற்ப - பிதற்றுதலை மேற்கொண்ட பசுநூல் களைப் படித்து நினது திருவடியை மனத்துள் உணராது வருந்திநிற்பர். எ - று. (கஅ)

ஆராத நஞ்சய னத்தலம் பூவர வாப்படைத்தா
ராராத நஞ்சய போற்றியென் றுற்று மவிமுத்ததா
ராராத நஞ்சயன் மொத்துவந் தாயுனை யன்றுமற்றோ
ராராத நஞ்சயர் விப்பேனை யாடி யகிலத்திலே.

இ - ள். ஆர் ஆதநம் சயனம் தலம் பூ அரவாப் படைத் தார் - இருத்தற்குரிய தவிசையும் படுத்தற்குரிய வெளியை யும் மலராகவும் பாம்பாகவும் பெற்ற பிரமவிட்டுணுக்க ளால்—சய போற்றி என்று ஆராதநம் ஆற்றும் அவிமுத்த - (நின் சீர்த்தி) வெல்க (நீ யெம்மைக்) காக்கவென் வாழ்த்தி வழிபாடு புரியப்படுங் காசிப்பதியோய்—தார் ஆரா - மாலையா கிய ஆத்திமலரையுடையாய்—தநஞ்சயன் மொத்து உவந் தாய்-அருச்சுனனது வில்லடியை மகிழ்ந்தேற்றோனே—உனை அன்று மற்றோர் ஆராத நஞ்சு அயர்விப்பேனை அகிலத்திலே ஆடி -நின்னையன்றி யேனையருண்ணவொண்ணாத ஆலாக லத்தின்கொடுமையையும் வாடச்செய்யும் என்னை இந்நிலத் தேவந்து ஆட்கொண்டருள்வாயாக. எ - று. (கசு)

அகிலேச மன்றிட்ட கள்ளிவந் தாங்கிங் கவதரித்தா
ளகிலேச மன்றிப் பொராவல்கு லாளுனை யன்றுகண்டா
யகிலேச மன்றினு மெண்மடங் காவின் றவசமுற்று
ளகிலேச டின்றி னடிப்பவ காசி யமர்பரனே.

இ - ள். அகிலேச - விச்சுவநாதனே—மன்றில் நடிப்பவ - திருச்சிற்றம்பலத்தின்கண்ணே ஆநந்தநடனஞ்செய்வோய்—காசி அமர் பரனே - காசியிலுறையும் பிரானே—ஏசு அமன்றிட்ட கள்ளி அகில் வந்தாங்கு இங்கு அவதரித்தாள் - இகழ்ச்சிநெருங்கிய கள்ளிக்கண் அகில் பிறப்பது போல இவ்வுலகத்தில் உதித்தோள்—அகி லேசம் அன்றிப் பொரா அல்குலாள் - பாம்பின்படம் சிறிதன்றிப் பெரிதொவ்வாத அல்குலையுடையாள் அவள்—உனை அன்று கண்டு ஆய கிலேசம் - நின்னை அற்றைநாளிலே நோக்கி அதனாலுண்டாகிய வருத்தம்—அன்றினும் இன்று எண் மடங்கா அவசம் உற்றாள் - அப்போழ்தினின்றும் இப்போழ்து எட்டுப்பங்கு அதிகமாக அதனால் வசமிழந்துகிடக்கின்றாள் (ஆகலின்விரைந்துவந்து அவளை அணைதல்வேண்டும்.) எ - று. (உ0)

அமலை யமருங் கலைய முனிவனை யார்வக்கொங்கை
யமலை யமருங் கலைய முனிவனை யாநந்தக்கா
னமலை யமருங் கலைய முனிவனை யாதரித்தா
யமலை யமருங் கலைய முனிவனை யாண்டதென்னே.

இ - ள். மருங்கு அமல் ஐயம் மருங்கு அலைய முனி வல்னை ஆர்வம் கொங்கை அமலைய - திருமேனியின்பக்கத்திலே நெருங்கிய (உளதோ இலதோ வெனும்) ஐயத்தை விளைக்கும் இடையை நடுங்கும்படி முனிந்து சூதாடுகருவியை வருத்துகின்ற வேட்கையைத்தரத்தக்க முலையைக்கொண்ட நிருமலையாகிய உமாதேவியையுடையாய்—அலைய - ஒடுக்கமில்லாதானே—முனி வனை ஆநந்தக்கான - ஆராய்ந்து படைக்கப்

பட்ட காசிப்பதியோய்—மலையம் மரும் கலையமுனிவனை ஆத்ரித்தாய் - பொதியத்தின்மேவுங் கும்பமுனியைத் தலையளிசெய்தவனே—அமலை அமரும் கலைய - பேரொலியோடு கையிற்றங்கிய மானையுடையோனே—முன் இவனை ஆண்டது என் - அநாதியிலே (நீ இந்தத் தீயேனாகிய) என்னை ஆட்கொண்டதற்குக்காரணம் யாது. எ - று. (உக)

ஆண்டலை வாயசங் கிடந் தருநர ராகியெண்ணி
லாண்டலை வாயசன் மம்பிற வும்புக் கயர்ந்திளைத்தே
னாண்டலை வாயச மானவண் காசி யநகவென்னை
யாண்டலை வாயசற் பாசநின் றுய்ய வருளுதியே.

இ - ள். ஆண்டலைவா யசமான வண் காசி அநக - ஆண்மையையுடைய முதல்வனே எச்சவடிவத்தாய் வளம்பொருந்திய காசிக்கட் புண்ணியமூர்த்தீ—ஆண்டலை வாயசம் கிடம் தரு நரர் ஆகி - கோழியுங் காக்கையும் புழுவும் மரமும் மனிதருமென உற்பவித்து—அலைவு ஆய பிறவும் சன்மம் புக்கு எண்ணில் ஆண்டு அயர்ந்து இளைத்தேன் - சலனம்பெருகிய மற்றைப்பிறவியுள்ளும் புகுந்து வரையறையில்லாத பல்லாண்டு நான்வருந்தி யெய்த்தொழிந்தேன்—என்னை ஆண்டு அலை வாய அசற்பாசநின்று உய்ய அருளுதி - ஆகலின், இனி என்னை ஆட்கொண்டு அஞ்ஞானவிருளைப் பொருந்துவிக்கின்ற ஒருபெற்றியினிலையாமையையுடைய பாசங்களினீங்கும்வண்ணங் கருணைபுரிவாயாக. எ - று. (உஉ)

அருக மதத்தை யொருசேயின் வென்ற வவிமுத்தமெய்
யருக மதத்தை மொழியாய் மறைமுடி யாற்சுமத்தற்
கருக மதத்தை யிராவண நின்னடைந் தாம்பவஞ்சேர்
தருக மதத்தை யுருவின்ப வெள்ள மருந்துவமே.

இ - ள். ஒரு சேயின் அருக மதத்தை வென்ற அவிமுத்த - திருஞானசம்பந்தமூர்த்தியென்னும் ஒருகுழந்தை

யால் அமண்சமயத்தை வென்றருளிய காசிப்பதியோய்—மெய் அருகு அம் தத்தை மொழியாய் - திருமேனியின்பக்கத்து அழகிய கிளிமொழிபோலுஞ் சொல்லியாகிய உமாதேவியையுடையானே—மறை முடியால் சுமத்தற்கு அருக - வேதஞ் சென்னியினாலே தாங்கத்தக்கோய்—மதத்து ஐராவண - மதத்தோடுகூடிய ஐராவணமென்னும் யானையையுடையாய்—நின் அடைந்தாம் - உன்கண் அடைக்கலம் புக்கேம்—பவம் சேர்ந்து அருகம் - ஆதலால், யாம் இனிப் பிறவியெய்திக் குன்றமாட்டேம்—அதத்தை உறு இன்பம் வெள்ளம் அருந்துவம் - அதாஅன்று நாசத்தையடையாத ஆநந்தப்பெருக்கை நுகர்தலுஞ்செய்வேம். எ - று. (உரு)

அரும்பு வனங்கண் மருவத் திகழ்தனத் தாரியைகோ
னரும்பு வனங்கண் மதலைகொள் வேணிய னன்பர்நெஞ்சி
லரும்பு வனங்கண் மணியனை யானிட மான்றமுதி
யரும்பு வனங்கண் முழுதும் புகழு மவிமுத்தமே.

இ - ள். அரும்பு வனம் கண் மருவத் திகழ் தனத்து ஆரியை கோன் - பூவரும்புகள் காட்டை இடமாகப் பொருந்த விளங்குகின்ற கொங்கையையுடைய உமாதேவிக்கு நாயகன்—அரும் புவனம் கள் மதலை கொள் வேணியன் - பெறுதற்கரிய கங்கைப்புனலையுந் தேன்பொருந்திய கொன்றைமாலையையுந் தாங்கிய சடையினன்—அன்பர் நெஞ்சில் அரும்புவன் - அடியாரது இதயத்துத் தோன்றுவோன்—நம் கண்மணி அனையான் இடம் - நமது கண்ணுண்மணியன்னான், அவன் வைகுமிடமாவது—ஆன்ற முதியரும் புவனங்கள் முழுதும் புகழும் அவிமுத்தம் - நிரம்பிய அறிவரன்மூத்தோரும் உலகங்களிலுள்ள எல்லாவுயிர்களும் புகழுதற்குக் காரணமான காசிப்பதியென்க. எ - று. (உச)

அவிமுத்த வாணகை யாரமு தேமகத் தாயமுத
லவிமுத்த வாணகை யார முழவெனு மையநவை
யவிமுத்த வாணகை யார முலேப்பெண் ணாநங்கனம்பெய்
யவிமுத்த வாணகை யார முயங்கியெம் மாவிநல்கே.

இ - ள். அவிமுத்தம் வாண - காசியில் வாழ்பவனே—கையார் அமுதே - வெறுப்பில்லார்க்கு அமிர்தம்போல்வாய்—மகத்து ஆய முதல் அவி முத்த - யாகத்திலுண்டாகிய தலேயவிப்பாகத்திற்குரிய அநாதிமுத்தனே—வாண அ முழவு கை ஆர் எனும் ஐய - வாணனென்னுங் கணத்தலேவ அந்த முழாவைக்கையான் முழக்கு என்று கட்டளேயிட்டருளும் இறையோய்—நவை அவி முத்தம் வாள் நகை ஆரம் முலேப் பெண்-குற்றந்தீர்ந்த முத்துப்போலும் ஒளிபொருந்திய முறுவலேயுஞ் சந்தனமிலேந்த கொங்கையையுமுடைய மாது—அநங்கன் அம்பு எய்ய விமுத் தவாள் - மன்மதன் பகழியை ஏவுதலாற் பொருமல் நீங்காளாயினுள்—நகை ஆர முயங்கி எம் ஆவி நல்கு - அவளே மகிழ்ச்சிநிரம்பப் புணர்ந்து எங்களுயிரைப் புறந்தருவாயாக. எ - று. (உரு)

ஆவணங் காவண முத்திற்பெற் றோங்கு மவிமுத்தத்தா
யாவணங் காவணங் குன்றேந்தி காந்த வவையிடைப்பொய்
யாவணங் காவணப் புத்தூரிற் காட்டிய வையதுதி
யாவணங் காவண மஞ்சுளத் தெண்ண வருண்மதியே.

இ - ள். ஆவணம் காவணம் முத்தில் பெற்று ஓங்கும் அவிமுத்தத்தாய் - கடைவீதி காவணத்தை முத்தினலே கிடைக்கப்பெற்று மேம்படுதற்கிடமான காசிப்பதியோய்—ஆ அணங்காவணம் குன்று ஏந்தி காந்த - ஆனிரை (மழையால்) வருத்தப்படாவாறு மலேக்குடையெடுத்த திருமாலுக்கு நாயகனே—கா வணம் புத்தூரில் அவையிடைப் பொய் ஆவணம் காட்டிய ஐய - சோலேசூழ்ந்த அழகிய மணம்வந்தபுத்

தூரிற் (சுந்தரமூர்த்திநாயனுரையாடற்பொருட்டு) வேதியர வைக்கட் பொய்ம்முறியோலையைக் காண்பித்தருளிய இறை வா—துதியா வணங்கா அஞ்சு வணம் உளத்து எண்ண அருள் -(யான் உன்னை) வாழ்த்திப் பணிந்து ஸ்ரீபஞ்சாக் கரத்தை மனத்துள்ளே தியானிக்கக் கருணைபுரிவாயாக. எ - று. (உசு)

மதியா தவரை மடித்தாங்கு மாதரு மாய்ப்பரென
மதியா தவரை மகிழ்ந்தியான் மயங்கு வதுநிற்குச்சம்
மதியா தவரை மருவுறு வாரண வாசியெந்தாய்
மதியா தவரை மலர்விழி வைத்த மணிகண்டனே.

இ - ள். தவரை மருவுறு வாரணவாசி எந்தாய் - தபோதனரைப் பொருந்திய காசிக்கண் எமது தந்தையே— மதி ஆதவரை மலர் விழி வைத்த மணி கண்டனே - திங்களை யும் ஞாயிற்றையும் (எக்காலத்தும்) மலர்கின்ற கண்களாக அமைத்த நீலமிடற்றோய்—யாதவரை மது மடித்தாங்கு - யதுகுலத்தாரைக் கள்ளுத் தொலைத்தாற்போல—மாதரும் மாய்ப்பர் என மதியாது - மகளிரும் நமக்கு இறுதிசெய்வ ரென்று எண்ணுமல்—அவரை மகிழ்ந்து யான் மயங்குவது நிற்குச் சம்மதியா - அம்மகளிரை விரும்பி நான் மையலுறு வது உன்றிருவுளத்திற்குச் சம்மதமுடையதொன்றேயோ, அதனை வாய்மலர்ந்தருள்வதுமன்றி, இனி யவ்வழிப்படராது என்னைத் தடுத்தாட்கோடல் வேண்டும். எ - று. (உஎ)

மணிகன்னி கைத்தட மூழ்கி யவிமுத்த வாணபிரா
மணிகன்னி கைத்தடங் காநறைத் தென்னு மலருருக்கு
மணிகன்னி கைத்தடர் சொல்லாற் றினமும்வழுத்துமனேன்
மணிகன்னி கைத்தடங் கண்ணிபங் காவென்கை மாதவமே.

இ - ள். மணிகன்னிகைத் தடம் மூழ்கி - கங்கையிலு ள்ள மணிகன்னிகைத்துறையில் நீராடி—அவிமுத்தம் வாண-

காசிக்கண் வாழ்பவனே—பிரமணி - சரசுவதியும்—கன்னி கைத்து அடங்கா நறைத்து என்னும் மலர் உருக்குமணி - பொருட்டினையுடைத்து ஒடுங்காத தேனையுடைத்து என்று சொல்லப்படும் பூவிற்றங்கிய இலக்குமியும்—கன்னி கைத்து அடர் சொல்லால் தினமும் வழுத்து மனோன்மணி - வாழைக் கனியை வெறுத்து வருத்தும் (இனிய) மொழிகளாலே நாளுந் துதித்தற்குக்காரணமாகிய மனோன்மணிப்பெயரினாள்—கன்னி - (எல்லாரையும் எல்லாவற்றையும் ஈன்றுங்) கன்னியாயேயிருப்பவள்—கைத் தடம் கண்ணி பங்கா - குடங்கையளவைக்கொண்ட விசாலமான விழிகளையுடையாள், அவளது பாகனே—என்கை மாதவம் - என்று வாழ்த்துதல் பெரியதவமாகும். எ - று. (உஅ)

மாதவ னான்முகன் வந்திப்பக் காசி வசிக்கின்றவன்
மாதவ னான்முக ரக்கட லார்ந்து வயின்சற்றும்விம்
மாதவ னான்முக மன்கொடு பூசித்த மன்பங்கிலோர்
மாதவ னான்முகந் துண்ணத்தந் தானருள் வாரிதியே.

இ - ள். மாதவன் நான்முகன் வந்திப்பக் காசி வசிக்கின்றவன் - திருமாலும் பிரமனும் வணங்கக் காசிக்கண் வாழ்பவன்—மா தவனால் முகரம் கடல் ஆர்ந்து சற்றும் வயின் விம்மாதவன் ஆன் - பெரிய தவவலியாலே ஒலியையுடைய சமுத்திரத்தையுண்டு சிறிதும் வயிறு பொருமாதவனாகிய அகத்தியமுனிவனும் இடபதேவரும்—முகமன்கொடு பூசித்த மன் - பல்வகையுபசாரத்தைக்கொண்டு வழிப்படப்பட்ட இறைவன்—பங்கில் ஓர் மாதவன் - திருமேனிப்பாகத்திலே ஒருபெண்ணையுடையோன்—அருள் வாரிதி நான் முகந்து உண்ணத் தந்தான் - அவன் கருணைக்கடலை யான் மொண்டு பருக நல்கினான். எ - று. (உகூ)

வாரா தரித்திரஞ் செல்வங்கண் மல்கு மதியினர்தேர்
வாரா தரித்திரந் தேரா ரவிமுத்தம் வைகியொர்நாள்
வாரா தரித்திர மென்றேங்கக் கொங்கை வளருங்கங்கை
வாரா தரித்திரந் துட்படிந் தீசனை வாழ்த்தினர்க்கே.

இ - ள். ஓர் நாள் அவிமுத்தம் வைகி - ஒருதினங் காசியில் வசித்து—வார் ஆ தரித்திரம் என்று ஏங்கக் கொங்கை வளரும் கங்கை வார் - கச்சு ஐயோ தங்கியிரேமென்று வருந்த முலைவளரப்பெற்ற கங்காதேவியினது நீரை—ஆதரித்து இரந்து உள் படிந்து - விரும்பிக் குறைகூறி உள்ளிடத்தே மூழ்கி—ஈசனை வாழ்த்தினர்க்கு - விச்சுவநாதனைத் துதித்தார்க்கு—தரித்திரம் வாரா - வறுமைகள் வருவனவல்ல—செல்வங்கள் மல்கும் - பல்வேறுசெல்வமும் பெருகும்—இத் திரம் மதியினர் தேர்வார் ஆதர் தேரார் - இவ்வுறுதியை அறிவுடையோர் தெளிவர் இழுதையர் தேறார். எ - று. (௩௦)

தினந்தின மாதுலர்க் கீந்திலந் தீயவை சிந்தித்துப்புத்
திநந்தின மாதுலன் பண்டெமற் கானவன் செய்யிற்கஞ்சத்
தினந்தின மாதுலங் காநின்ற காசிச் சிவன்பசுப
திநந்திந் மாதுல வாக்கோ னருளெங்கன் சேர்குவமே.

இ - ள். தினம் தினம் ஆதுலர்க்கு ஈந்திலம் - யாம் நாடோறும் வறியோர்க்கு வேண்டுவ கொடுத்தேமில்லை—தீயவை சிந்தித்துப் புத்தி நந்தினம் - பாவச்செயல்களையே நினைத்து மனமழிந்தேம் ஆகலின்—பண்டு எமற்கு மாதுலன் ஆனவன் - முற்காலத்து எம்மவனாகிய வணிகனுக்கு மாமனாயினோன்—செய்யில் கஞ்சத்தில் நந்து இனம் மா துலங்கா நின்ற காசி - வயலின்கண்ணே தாமரைப்பூவிற் சங்குக்கூட்டமும் வண்டும் விளங்குதற்குக்காரணமான காசிப்பதியிலெழுந்தருளியிருக்கின்ற—சிவன் பசுபதி நந்தி - சிவன் பசுபதி நந்தியென்னுந் திருநாமங்களையுடையான்—நமாது உலவாக்

கோன் - நம்முடைய கெடாத இறைவன்—அருள் எங்ஙன் சேர்குவம் - அவனது கருணையை எவ்வாறு அடையப்பெறுவேம். எ - று. (௬க)

குவளை யனந்தன் வடந்துய்த் தணைகொண்ட கொண்டல்கை
குவளை யனந்தண் மணிமுதற் றன்வளங் கோநதிகட் [த்தங்
குவளை யனந்தங்கொடுபார்க்குங்காசியெங்கோன்வெற்பவெற்
குவளை யனந்த லுறுநீ பிரியினுங் கூடினுமே.

இ - ள். கு அளை துய்த்து அனந்தன் வடம் அணை கொண்ட - நிலத்தையுந் தயிரையும் உண்டு சேடனையும் ஆலிலையையுஞ் சயனத்தலமாக அமைத்துக்கொண்ட—கொண்டல் கைத் தங்கு வளை அனம் தண் மணி முதல் தன் வளம் - கார்போலுந் திருமாலது கரத்திற்றங்குதற்குரிய சங்கும் அன்னப்புள்ளுங் குளிர்ந்த முத்தும் என்னுமிவைமுதலிய தனது செல்வங்களை—கோநதி கண் குவளை அனந்தம் கொடு பார்க்கும் காசி - கங்கையாறு விழியாகிய உற்பலம் பலவற்றைக்கொண்டு நோக்குதற்கிடமான காசிப்பதிக்கண்—எம் கோன் வெற்ப-எம்பிரானது மலைத்தலைவனே—நீ பிரியினும் கூடினும் எற்கு வளையல் நந்தல் உறும் - நீ தணந்துழியும் புணர்ந்துழியும் எனக்கு வளைகள் தொலைவுறுநின்றன, ஈதோர் வியப்பிருந்தவாறென்னை. எ - று. (௬உ)

மேதாவி கற்பக வேலெறிந் தாய்கழை வில்விசத
மேதாவி கற்பகன் றெவ்வேயென் றுதரை வீணரையூன்
மேதாவி கற்பக ளேபர மாக்களை விள்ளவுள்ள
மேதாவி கற்பக நேர்காசி நம்பனை வேட்டுன்கணே.

இ - ள். உள்ளமே கற்பகம் நேர் காசி நம்பனை உன் கண் வேட்டுத் தாவி - நெஞ்சே (வேட்டனமுழுதுங் கொடுக்கும்) கற்பகதருப்போலுங் காசிக்கண் நம்பனென்னுந்திரு

நாமத்தையுடைய விச்சுவநாதனை உன்னிடத்து விரும்பி இருத்துவர்யாக—ஆதரை வீணரை ஊன் மேதா விகற்பம் களேபரம் மாக்களை - இனி அறிவில்லாரும் பயனற்றோருமாகிய தசை நிணமென்னும் இவற்றின் வேறுபாட்டானாய யாக்கையையுடைய மனிதரை—மேதாவி கல் பக வேல் எறிந்தாய் கழை வில்லி சத மேதா இகல் பகன் தெவ்வே என்று விள்ளல் - நுண்ணுணர்வுடையோய் கிரவுஞ்சகிரி பிளவுபட வேற்படையெறிந்தகுமாரனே கருப்புவில்லைத்தரித்த மதனனே நூறுவேள்வியியற்றிய இந்திரனே வலியையுடைய பகாசுரனுக்குப் பகையாகிய வீமனேயென்று புகழ்ந்துசொல்ல, நினையற்க. எ - று. (கக)

வேட மருக விழித்தாய் புடைத்த விசையற்கருள்
வேட மருக மலையாற் கவிமுத்த வித்தகசெவ்
வேட மருக வடிமா முகன்றந்தை வேய்தற்குநின்
வேட மருக மெழுத்தைந் தருகம் விளம்புதற்கே.

இ - ள். வேள் தமர் உக விழித்தாய் - மன்மதனும் அவற்கு உறவினராய்வந்தாருங் கெடும்படி பார்த்தோனே—புடைத்த விசையற்கு அருள் வேட - வில்லானடித்த அருச்சுனற்குக் கருணைசெய்த வேட்டுவனே—மலையாற்கு மருக - பருவதராசனுக்கு மருமகனே—அவிமுத்தம் வித்தக - காசிக்கட் சதுரதையுடையாய்--செவ் வேள் தமருகம் அடி மா முகன் தந்தை - செவ்விய குமாரக்கடவுளுக்கும் உடுக்கையொத்த காலையுடைய இளங்களிற்றுமுகத்தைக்கொண்ட மூத்தபிள்ளையாருக்கும் அப்பனே—நின் வேடம் வேய்தற்கு அருகம் - உனது திருவேடமாகிய விபூதிருத்திராக்கமுதலியபொருளே அணிதற்குத் தகுதிப்பாலன—ஐந்து எழுத்து விளம்புதற்கு அருகம் - ஸ்ரீபஞ்சாக்கரமனுவே ஓதத்தக்கது. எ - று. ()

விளங்கனி யாயர்முற் கன்றொன்றின் வீழ்த்தி விதிபுகழ்கூ
விளங்கனி யாய மரஞ்சூ ழவிமுத்தம் வீணையின்வாய்
விளங்கனி யாய வருமிடைப் பாண்மகண்மேன்மைத்தன்மை
விளங்கநி யாயம் வழுதியைச் சொல்வித்த வேந்திடமே.

இ - ள். வீணையின் வாய் விள் அம் கனி - வீணையைப் போல வாயாலும் பாடுகின்ற அழகிய கற்பழியாமையோடு கூடிய—ஆய வரும் இடைப் பாண் மகள் - ஆராய்தலாற்றொன்றும் நுசுப்பினையுடைய பத்திரன்மனைவியாகிய பாடுவிச்சியினது—மேன்மைத் தன்மை விளங்க - உயர்ச்சியியல்பு எல்லார்க்குந் தெரியும்படி—வழுதியை நியாயம் சொல்வித்த வேந்து இடம் - பாண்டியனை (மனத்தாறின்றியும்) உண்மை கூறச்செய்த எப்பொருட்குமிறைவன்றங்குமிடமாவது—ஆயர் முன் கன்று ஒன்றின் விளா கனி வீழ்த்தி விதி புகழ் - இடையரெதிரே மாயப்பசுவின்கன்றொன்றால் விளாம்பழத்தை வீழ்வித்ததிருமாலும் பிரமனுந் துதித்தற்குக்காரணமான—கூவிளம் கனி ஆய மரம் சூழ் அவிமுத்தம் - வில்வமும் வாழையுமாகிய மரங்கள் சுலவப்பெற்ற காசிப்பதியென்க. எ - று. (௩௫)

இடந்தந்த வாமனன் கண்ணிடச் சக்கர மீத்துவந்தா
யிடந்தந்த வாமன நுண்மருங் கம்மனைக் கீதெனமெய்
யிடந்தந்த வாமன காசியண் ணனமற் கியாங்கலங்கி
யிடந்தந்த வாமனம் பால்வந்தஞ் சேலென் றிரட்சித்தியே.

இ - ள். அந்த வாமனன் கண் இடந்து இடச் சக்கரம் ஈத்து உவந்தாய் - அத்திருமால் விழியைக் கீண்டு அருச்சித்தலால் ஆழிப்படையை அவனுக்கு நல்கி மகிழ்ந்தோனே—தந்து அவாம் அன நுண் மருங்கு அம்மனைக்கு ஈது இடம் என மெய் இடம் தந்தவா - நூல்விரும்பும் அத்தன்மைத்தாய நுண்ணிய இடையையுடைய உமாதேவிக்கு இது தங்குமிட

மாருமென்று திருமேனியினிடப்பாகத்தைக் கொடுத்தோய்--மன - எப்பொருட்கும் இறையவனே—காசி அண்ணல் - காசித்தலைவ—யாம் நமற்குக் கலங்கியிடு அந்தம் தவாமல் நம்பால் வந்து அஞ்சேல் என்று இரட்சித்தி - நாங்கள் இயமனுக்கு அஞ்சி நிலைகுலையுங் கடைநாளிலே தவறாது நம்மிடத்து வந்து வெருவாதொழிகவென்று அபயங்கூறிக் காத்தருள்வாயாக. எ - று. (௩௬)

சித்தவி காரணந் தக்கன் மகம்புக்க தேவரைய
சித்தவி காரன கந்தரன் காசிச் சிவனுபதே
சித்தவி கார வரியூர் சகாரமுற் சேர்மனுவாற்
சித்தவி காரக் கலக்க மெனைவிட்டுத் தீர்ந்தனவே.

இ - ள். சித்து - ஞானசொரூபீ—அவி காரணம் தக்கன் மகம் புக்க தேவரை அசித்து அவி கார் அன கந்தரன் - அவிப்பாகவுணவுகாரணமாகத் தக்கனது வேள்விச்சாலைக்கட்போந்த கடவுளரை அவமதிச்சிரிப்புச்செய்து தொலைத்த மேகம்போலுமிடற்றினையுடையோன்--காசிச் சிவன் உபதேசித்த - காசிக்கட் சிவபிரான், அவன் உபதேசித்தருளிய—இகாரம் வரி ஊர் சகாரம் முன் சேர் மனுவால்-இகரமென்னும் எழுத்து ஏறப்பெற்ற சகரத்தை முதலிற்பொருந்திய ஸ்ரீபஞ்சாக்கர மந்திரத்தாலே—எனைச் சித்த விகாரம் கலக்கம் விட்டுத் தீர்ந்தன - எனக்கு மனவேறுபாட்டாற்றோன்றுந் துன்பவின்பமறுக்கங்கள் நீங்கியொழிந்தன. எ - று. (௩௭)

தீர மனத்திர ளிற்பொலி கங்கையிற் சென்முழக்கந்
தீர மனத்திரங் காநந்தக் கானன் சிலம்பிற்றணந்
தீர மனத்திரங் காதின்னு மங்குவ சித்ததென்ன
தீர மனத்திர சீங்கண் டிலாளெந் திருந்திழையே.

இ - ள். தீரம் அனம் திரளின் பொலி கங்கையில் செல் முழக்கம் தீர மன் நத்து இரங்கு ஆநந்தம் கானன் சிலம்பில்-

கரைகள் அன்னப்புள்ளுக்கூட்டத்தால் விளங்கப்பெற்ற கங்கையாற்றிலே முகிலொலி மாறும்படி மிக்க சங்குகள் ஆரவாரித்தற்குக்காரணமான காசிப்பதியையுடைய சிவபிரான்து மலையின்கண்ணே—தணந்திர் எம் திருந்திழை அலைத்து இரசம் கண்டிலாள் - பிரிந்த தலைவரே எமது பெண் அன்னசாரத்தைக் கண்ணும்பாராதாளாயினள்—அ மனத்து இரங்காது இன்னும் அங்கு வசித்தது என்ன தீரம் - அந்த உள்ளத்தில் இரக்கமின்றி இதுபோழ்தும் அவ்விடத்தே நீர்வைகியது யாதுதைரியம்பற்றியோ. எ - று. (௩அ)

திருமாமை யானத்தன் சங்கரன் றாணு சிறந்தசெங்க
திருமாமை யாநத்தன் போற்பெண்மை காமுறத் தேசொடுமு
திருமாமை யானத்தன் றாளடைந் தாமினித் தீவினைக்குத்
திருமாமை யானத்த னாதியர் புன்பதஞ் சிந்தியமே.

இ - ள். திரு மா மயானத்தன் - செல்வம்பொருந்திய மகாமயானமென்னுங் காசிப்பதியோன்—சங்கரன் தாணு - சங்கரன் தாணு என்னுமித்திருநாமங்களையுடையான்—ஆமை ஆம் நத்தன் போல் சிறந்த செம் கதிரும் பெண்மை காமுறத் தேசொடு முதிரும் மாமையான் - ஆதிகூர்மமாகிய திருமால்போல மேம்பட்ட செஞ்ஞாயிறும் பெண்டன்மையை விரும்பும்படி ஒளியோடு மிக்க அழகன்—அத்தன் தாள் அடைந்தாம் - எவ்வுயிர்க்குந் தந்தை, அவனது திருவடியைச் சரண்புக்கேம்—இனித் தீவினைக்குத் திருமாம் - ஆகலான், இனிக் கொடிய பாவச்செய்கைக்கு மீண்டுசெல்லேம்—மையானத்தன் ஆதியர் புன் பதம் சிந்தியாம் - அதாஅன்று, மேகவாகனனாகிய இந்திரன்முதலியோருடைய புல்லிய பதவிகளையும் பொருளாக மதியேம். எ - று. (௩௯)

சிந்திக்கு மாயவன் றேங்கால முண்டவன் சேடர்க்குள்க
சிந்திக்கு மாயவன் காசிப் பிரான்வென்றிச் சேய்க்குமதஞ்

சிந்திக்கு மாயவண் மேவுபங் கன்கழல் செங்கணிட்டுச்
சிந்திக்கு மாயவன் றேரான் பிறரெங்ஙன் றேர்வதுவே.

இ-ள். இக் கு மாய அன்று சிந்து ஓங்கு ஆலம் உண்டவன் - இவ்வுலகமழியும்படி அக்காலத்துக் கடலினின்றெழுந்த விடத்தை அருந்தினோன்—சேடர்க்கு உள் கசிந்து இக்கும் ஆயவன் - அடியார்க்கு மனங்கசிந்து கரும்புமாகி நின்றவன்—காசிப் பிரான் - காசிப்பதிக்கணிறைவன்—வென்றிச் சேய்க்கும் மதம் சிந்திக்கும் ஆய் அவள் மேவு பங்கன் கழல் - வெற்றியையுடைய குமாரசுவாமிக்கும் மதநீரைப் பொழிவோனாகிய விநாயகக்கடவுளுக்குந் தாயாயுள்ள அந்த உமாதேவிதங்கிய பாகத்தான், அவனது திருவடியை—செம் கண் இட்டுச் சிந்திக்கும் மாயவன் தேரான் - சிவந்த விழியை அருச்சித்துத் தியானிக்கின்ற திருமாலும் உணர்ந்து தெளியாதவனாயினான்—பிறர் தேர்வது எங்ஙன்-அற்றேல் அத்திருவடியை மற்றையர் அறிந்து தேறுதல் எவ்வாறாகும். எ - று.

வதுவைக் குமரி குழலைக்கஞ் சாறரின் வாங்கியதே
வதுவைக் குமரி மலர்ப்பொழிற் காசி வரதவுண்டா
வதுவைக் குமரி யிறைவா மறந்துனை மங்களம்ப
வதுவைக் குமரி மடன்மாந்தர்க் கோதி வருந்தினமே.

இ - ள். வதுவைக் குமரி குழலைக் கஞ்சாறரின் வாங்கிய தேவ - கலியாணக்கோலத்தையுடைய மகளது கூந்தலை மானக்கஞ்சாறநாயனாரால் ஈர்வித்த கடவுளே—அரி துவைக்கும் மலர்ப் பொழில் காசி வரத - வண்டு மிதிக்கும் பூக்களையுடைய சோலையாற்சூழப்பட்ட காசிப்பதிக்கண் வரங்கொடுப்போய்—உண்டாவது வைக்கும் அரி இறைவா - பிரமனாற் றோன்றுவதாகிய உலகத்தைநிலைபெறுத்துகின்ற திருமாலுக்குத் தலைவனே—உனை மறந்து-(பரமோபகாரியாகிய)உன்னை நினையாதொழிந்து—கு மரி மடன் மாந்தர்க்கு - பூமியிலே

இறந்துபடத்தக்க அறியாமையையுடைய மக்கள்பொருட்டு--மங்களம் பவதுவை ஓதி வருந்தினம் - சுபமுண்டாகுகவென்னும் ஆசீர்வசனத்தைக் கூறி யிதுகாறும் யாம் துன்புற்றேம் இனி அவ்வாறுசேறலைத்தடுத்துக் காத்தருள்க. எ-று. ()

வருந்தத் தவம்பலஞ் சற்றுமின் றன்னிய மார்க்கத்துடல்
வருந்தத் தவம்பல செய்வீ ரவிமுத்தம் வாழ்திர்கொன்ற
வருந்தத் தவம்பல ரின்னம ரென்றவர் மாட்டெருதி
வருந்தத் தவம்பல வாவென்பி ரேன்முத்தி வாய்த்திடுமே.

இ-ள். உடல் வருந்தப் பல தவம் செய்வீர் - உடம்பு நோவப் பல்வகைய தவத்தைப்புரிகின்ற மக்காள்—அவிமுத்தம் வாழ்திர் -(இனி அத்துன்பவழியை நீத்துக்) காசிப்பதிக்கண்வைகி—தத்த கொன்றவரும் வம்பலர் இல் நமர் என்றவர் மாட்டு - தத்தா என்னை யுயிரலைத்தாரும் பகைவரில்லை நம்மவரேயாவரென உரைத்தருளிய மெய்ப்பொருணாயனரிடத்து—எருது இவர் உந்து அத்த - இடபத்தையேறி நடாத்திவந்த அப்பனே—அம்பலவா - சிற்றம்பலத்தாய்—என்பிரேல் முத்தி வாய்த்திடும் - என்று வாழ்த்துவீராயின் வீட்டின்பங்கிடைக்கும்—அன்னியம் மார்க்கத்துப் பலம் சற்றும் இன்று தத்து வரும் அவம் - (இச்சித்தாந்தசைவநெறியொழிந்த) ஏனைச் சமயநெறியிலே பயன் சிறிதுமில்லை, அதுவுமன்றி ஆபத்தும் உண்டாகும், ஆதலான் அவற்றிற் புகுதல் தீது. எ-று. (சஉ)

வாயுமை யங்க நயன கியங்க மதிமயங்க
வாயுமை யங்கண் மிடையூஉக் குழற மறலிவந்த
வாயுமை யங்க ணிழுக்குமன் றுய்வதெவ் வண்ணமெழில்
வாயுமை யங்க னவிமுத்தன் பாதம் வழுத்தலரே.

இ - ள். எழில் வாய் உமை அங்கன் - அழகுபொருந்திய உமாதேவியோடுகூடிய திருமேனியையுடையான்—அவிமுத்தன் பாதம் வழுத்திலரே - காசிப்பதியோன், அவனது திருவடியை வாழ்த்தாத தீயர்காள்—வாயு மயங்க நயனம் மயங்க மதி மயங்க - உயிர்ப்பு நிலைகுலையவும் விழி மருட்சியெய்தவும் புத்தி கலங்கவும்—ஐயங்கள் மிடையூஉ வாயும் குழற - சந்தேகங்களை நெருங்குவித்து வாய்குழறுதலுறவும்—உமை மறலி அவாய் வந்து அங்கண் இழுக்கும் அன்று உய்வது எவ் வண்ணம் - உங்களை இயமன் விரும்பிப் போந்து அவ்விடத்துக்கு ஈர்க்கும் அந்தக்காலத்திலே அவனினீங்கி நீர்பிழைத்தல் எங்ஙனமாகும். எ - று. (சங)

வழுத்தரி யானை யுறவிக லில்லியை வண்மெய்வழு
வழுத்தரி யானை யுறழ்காசிச் சம்புவை மாவுரித
வழுத்தரி யானை யுறமதி லெய்த மகேசவென்று
வழுத்தரி யானை யுறவொழித் தேத்த வளர்ந்ததின்பே.

இ - ள். வழுத்த அரியானை - சொல்லுதற்கரியதன்மையான்—உறவு இகல் இல்லியை - நண்பு பகையில்லாதோன்—மெய் வழுவழுத்த அரி யானை உறழ் காசிச் சம்புவை - உடம்பு வழுவழுப்புற்ற பன்றி ஆனையையொத்து விளங்குங் காசிக்கட் சுகத்துக்கு நிலைக்களமானவன், அவனை—மா உரி தவழ் உத்தரியா - மதமாவினது தோலாகப்பொருந்திய மேற்போர்வையையுடையாய்—நை உற மதில் எய்த மகேச என்று - வருந்தும்படி மூவெயிலை அம்புவிடுத்தழித்த மகேசமூர்த்தியே யெனக்கூறி—ஐயுறவு ஒழித்து வழுத் தரி யான் எத்த இன்பு வளர்ந்தது - சந்தேகத்தைப் போக்கிக் குற்றத்திற்றங்கிய நான் துதித்தலாலே எனக்குச் சிவாநந்தம் பெருகுகின்றது. எ - று. (சச)

இன்ப வநத்தினைச் சார்ந்தா டிலைகங்கை யாற்றிடைக்கு
யின்ப வநத்தினை யெய்தலின் மங்கையர்க் கீடழிந்தா
யின்ப வநத்தினை யார்குழை யாயென் கிலாய்பல்வகை
யின்ப வநத்தினை நெஞ்சேயந்தோவென்னினிச்செய்வையே.

இ - ள். நெஞ்சே இன்பம் வநத்தினைச் சார்ந்து கங்கை யாற்றிடை ஆடிலை - மனமே ஆனந்தகானனமென்னுங் காசியையடைந்து கங்காநதியிலேமூழ்கினைத்தாயில்லை—இன்பவ நத்தினை ஆர் குழையாய் என்கிலாய் - இனிய பவனே சங்கைப்பொருந்திய குண்டலத்தாயென்றுசொல்ல மதித்தாயில்லை--குயின் பவநத்து இனைவு எய்தலின் மங்கையர்க்கு ஈடு அழிந்தாய் - மேகங்காற்றாலுடைவுறுதல்போல மங்கையரால் வலிகுறைந்தாய்—பல் வகையின் பவம் நத்தினை - மற்றும் பலவிதத்தினையுடைய பாவவினைகளை விரும்பாநின்றாய்—அந்தோ இனி என் செய்வை - ஐயோ இனிநீ யாது செயற்பாலை, இயன்றனவாயகேடெல்லாம் செய்தொழிந்தாயென்றபடி. எ - று. (சரு)

வையா கரணர் முதலோர் மிடையின்ப மாவனசி
வையா கரண களங்குறு காமுனம் வான்சரிப்ப
வையா கரண முறுவலி னீற்றிய வையவைய
வையா கரணங் கடந்தாயை யாதின் மதிப்பதுவே.

இ - ள். வையாகரணர் முதலோர் மிடை இன்பம் மாவன - வியாகரணிகண்முதலிய கலைவல்லோர் நெருங்கிய ஆநந்தகானனத்தாய்--சிவை ஆக-உமாதேவிபொருந்திய திருமேனியையுடையவனே—வான் சரிப்பவை ஆகு அரணம் - விசும்பிலியங்குவனவாகிய மும்மதிலையும்—ரண களம் குறுகா முனம்,முறுவலின் நீற்றிய ஐய - போர்க்களத்திற் சார்தற்கு முன்னரே புன்னகையாற் சாம்பராக்கிய கடவுளே—வையம் வையா - நிலத்தேரையுடையோய்—கரணம் கடந்தாயை மதி

ப்பது யாதின் - (மனம்வாக்குக்காயமென்னும்) திரிகரணத் துக்கும் அப்பாற்பட்டு நிற்கின்ற உன்னைத் தியானிப்பது எக்கருவியினாலாம். எ - று. (சசு)

பதுமா தநத்தி நடம்புரி காசிப் பரன்மகற்சம்
பதுமா தநத்தி னசையா னெனுயன்னை பண்டியொரு
பதுமா தநத்தி யுதித்ததிற் பேறு படுப்பதுந்துய்ப்
பதுமா தநத்தி னிமித்தலை யாநின்ற பாழ்மனமே.

இ - ள். தநத்தின் நிமித்து அலையாநின்ற பாழ்மனமே - பொருளின்பொருட்டு உழல்கின்ற வெறுவிய நெஞ்சே!— பதும ஆதநத்தி நடம்புரி காசிப் பரன்-தாமரைத்தவிசையு டைய இலக்குமி (ஆநந்தமிகுதியினாலே) கூத்தாடுதற்குக் கார ணமான காசிப்பதிக்கண் மேலோன்—மகத் சம்பத் உமா தநத்தில் நசையான் எனும் - பெரிய ஐசுவரியத்தோடுகூடிய பார்ப்பதியினது கொங்கைக்கண் வேட்கையுடையோன் என்று வாழ்த்தாயாயினை—அன்னை பண்டி ஒருபது மாதம் நத்தி உதித்ததின் பேறு - தாய்வயிற்றில் ஒருபத்துத் திங்கள் விரும்பியிருந்து பிறந்ததனாலே (யாம்) பெறுதற்குரியன— படுப்பதும் துய்ப்பதுமா - உறங்குவதும் உண்பதும் ஆகிய இவை தாமோ கூறுவாயாக. எ - று. (சஎ)

மனத்தகங் கார மணவிய வாரமில் யாமுனதாண்
மனத்தகங் கார மணவிய வாரழல் வாதில்வென்ற
மனத்தகங் கார மணவிய வாரஞ்சு மால்விடைக்க
மனத்தகங் கார மணவிய வாரண வாசியனே.

இ - ள். கார் அமண் அவிய வார் அழல் வாதில் வென்ற மன் அத்த - கரிய சமண்மதத்தை நீரும்நெருப்பும் என்னும் இவைகாரணமான வாதத்தின்கண்வைத்து வெற்றிகொண்ட ருளிய ஞானசம்பந்தத்தலைவரது பிதாவே—கங்கா ரமண -

கங்கையோடு விளையாடுதலைச்செய்வோய்—வியவார் அஞ்சு மால் விடைக் கமனத்த - பகைவர் வெருவத்தக்க விட்டுணு வாகிய இடபத்திற் செல்பவனே—கங்கு ஆரம் மணம் இயம் வாரணவாசியனே - வரம்பின்பக்கத்து முத்துக்களையும் மங்கலவாச்சியத்தையுமுடைய காசித்தலத்துள்ளாய்—மன த்து அகங்காரம் அணவிய வாரம் இல் யாம் உன தாள் மனத் தகம் - உள்ளத்தில் அகந்தையைப்பொருந்திய அன் பில்லாத நாங்கள் நின்றிருவடிகளை அடைதற்குத் தகுதி யுடையேமல்லேம். எ - று. (சஅ)

வாசி வசிவசி மாறன் வயின்விற்ற வாசிவசி
வாசி வசிவசி வாவென் றியம்பு வயங்கருணூல்
வாசி வசிவசி மாசலப் பாலின்ப மாவனத்தா
வாசி வசிவசி யஞ்செய்மின் னாரை மடநெஞ்சமே.

இ-ள். மடம் நெஞ்சமே - அறியாமையினையுடைய மன மே—வாசி வசி வசி மாறன் வயின் விற்றவர் - குதிரையைக் கூர்மைபொருந்திய வாட்படையைத்தரித்த பாண்டியனிட த்து விற்றோனே—சிவ சிவா சிவசிவ சிவா என்று இயம்பு - சிவனே சிவனே சிவனே சிவனே சிவனே என்று கூறுவா யாக—வயங்கு அருள் நூல் வாசி-விளங்குகின்ற சைவாகமத் தைப் படித்தலைச் செய்—வசு இமாசலப்பால் இன்பம் மாவ னத்து வசி-பொன்மயமான இமயமலையின்பக்கத்துள்ள காசி யிலே தங்கியிரு—சி வசியம் செய் மின்னாரை ஆவா சிவ - இலக்குமியையும் வசீகரிக்கின்ற மகளிரை அந்தோ முனிந்து விடு. எ - று. (சகூ)

மடமா தருக்கு நிதிவேட்கை யேனை மறலிதூட்கீன்
மடமா தருக்கு நரகாழ்தி யென்னுமுன் மாயவக்க
மடமா தருக்கு முதுகோ டிறுத்த மகேசசைவ
மடமா தருக்கு முனைத்தேற் றவிமுத்த வாசநல்கே.

இ - ள். மாயவன் கமடம் மா தருக்கு முதுகு ஒடு இறுத்த மகேச - விட்டுணுவாகிய ஆமையினது பெரிய செருக்கையும் முதுகோட்டினையும் ஒடித்தருளிய மகேச்சுரனே—மடம் மாதர் உக்கு நிதி வேட்கையேனை-இளம்பெண்டிரும் உந்த நிலமும் பொருளும் என்னும் இவற்றில் விருப்பத்தையுடைய என்னை—மறலி துட்கன்மட மாதர் உக்கு நரகு ஆழ்தி என்னும் முன்-இயமன் தீவினையை முக்கியமாகக்கொண்டோய் அழகழிந்து நிரயத்திலழுந்துவாயாதி என்று சொல்லுதற்கு முன்னரே—சைவ மடம் ஆதருக்கும் உனைத் தேற்று அவிமுத்த வாசம் நல்கு - சைவர்வாழுமடங்கள் அறிவில்லார்க்கும் நின்னியலைத்தெளிவித்தற்குக்காரணமான காசியில் வசிக்குந்தன்மையை (எனக்குத்) தந்தருள். எ - று. ()

வாசங் கமழுங் குதலை யுருது வளர்த்தபுல
வாசங் கமழுங் கணிமிடற் றம்மைத வாமிக்குச்சு
வாசங் கமழும் படிகங்கொய் வாரண வாசியநின்
வாசங் கமழு மலர்த்தாளில் வைத்தென்னை வாழ்விக்கவே.

இ - ள். சங்கம் மழுங்குதலை உருது வளர்த்த புலவா - தமிழ்ச்சங்கம் மலினத்தையடையாமல் அதனையோங்குவித்த பண்டிதனே—சங்கம் அழுங்கு அணி மிடற்று அம்மை தவா-சங்கு வருந்தத்தக்க அழகிய கழுத்தையுடைய உமாதேவிக்கு நாயக—சுவாசம் மிக்குக் கம் அழும்படி கம் கொய் வாரணவாசிய - நெட்டுயிர்ப்பெறிந்து பிரமன் அழாநிற்க (அவனது) தலையைக் கிள்ளிய காசிப்பதியோய்—நின் வாசம் கமழும் மலர்த் தாளில் என்னை வைத்து வாழ்விக்க வா - உனது மணம் பரிமளிக்குந் தாமரைப்பூவொத்த திருவடிக்கண்ணே அடியேனையிருத்தி வாழ்வுபெறச்செய்தற்பொருட்டு வந்தருள். எ - று. (௫க)

விக்கிந ராச ரணையொழிந் தியான்கப மேலிட்டுத்த
விக்கிந ராச கலலோக நாயக மெல்லியற்செல்
விக்கிந ராச கலக்கங்கை தோய விமுத்தகுக
விக்கிந ராச சனகவஞ் சேலென வேண்டுவனே.

இ - ள். அரா - அரனென்னுந் திருப்பெயர்புனைந் தோய்—சகல லோக நாயக-எவ்வுலகத்துக்கும் இறைவனே-- மெல் இயல் செல்விக்கு இனர் ஆசு அகலக் கங்கை தோய் அவிமுத்த - மென்மையான சாயலைக்கொண்ட இலக்குமிக்கு இனமாயுள்ள மகளிர் குற்றம்நீங்கக் கங்காநதியின்மூழ்குதற் கிடமாகிய காசித்தலத்தையுடையாய்——குக விக்கிநராச சனக - குமாரசுவாமிக்கும் விநாயகமூர்த்திக்குந் தந்தை யே—விக்கி நர ஆசரணை ஒழிந்து கபம் மேலிட்டு யான் தவிக்கின் அஞ்சேல் என வேண்டுவன் - விக்குதலைச்செய்து மனித்தவொழுக்கந் தொலையப்பெற்றுக் கோழை யதிகரித்த லாலே நான் வருந்தினல் (அப்பொழுது) வெருவாதொழி யென்று நீ திருவாய்மலரும்பொருட்டு (நின்னை) யிரவாநின் றேன். எ - று. (௩௨)

வனமலை யாமை வடிவுடை மாதவன் வாழ்த்துறுசி
வனமலை யாமை யரிவிழி மாதவன் வல்விடம்பு
வனமலை யாமையுண் டான்மகிழ்மாதவன்மாண்பிற்செய்வான்
வனமலை யாமையுற் றேன்சென்றிர் காசி வசித்திடுமே.

இ-ள். வனம் மலை ஆமை வடிவு உடை மாதவன் வாழ்த் துறு சிவன் - துழாயையணிந்த கூர்மவடிவத்தையுடைய விட் டுணுவினலே துதிக்கப்பட்ட சிவனெனுந் திருப்பெயருள் ளோன்—அமலை ஆம் ஐ அரி விழி மாது அவன் - உமாதேவி யாகிய ஐந்துவகை யிரேகைபடர்ந்த கண்களைப்படைத்த பெண்ணோடுகூடிய அத்தன்மையன்—வல் விடம் புவனம் அலையாமை உண்டான் மகிழ் - வலியநஞ்சை உலகம் நிலை

லையாவண்ணம் அமுதுசெய்தோன், அவன் உவத்தற்குரிய--மா தவன் மாண்பின் செய்வான்-பெரியதவத்தை மேம்பாட்டுடன் இயற்றுதற்பொருட்டு—ஆமை உற்று வனம் மலை என் சென்றிர் ? (நன்மக்காள்) ஐயோ மயக்கத்தைப்பொருந்திக் காட்டிலும் மலையிலும் எற்றுக்குப்போயினீர்—காசி வசித்திடும் - (இனி) காசிப்பதியின்கண் (வாளா) தங்கியிருங்கள், அவ்வாறிருத்தலே உறுதிப்பயனடைதற்கு அமையுமென்பது கருத்து. எ - று. (௫௩)

சித்தி யனைத்துச் சடமாக்கி யென்னைத் தெறுமலமொ
சித்தி யனைத்து வரநதிக் காசியிற் றீர்த்தபுத்தி
சித்தி யனைத்துங் கவைவே லனைத்தந்த செல்விபங்க [னே.
சித்தி யனைத்துநின் றொண்டர்தொண் டாற்றச்செய்சீர்த்திய

இ - ள். அனைத்து வரநதிக் காசியில் தீர்த்த - அனமீனையுடையதாகிய கங்கையோடுகூடிய காசிப்பதிக்கட் புனிதனே--புத்தி சித்தியனைத் துங்கம் வை வேலனைத் தந்த செல்வி பங்க - புத்தியுஞ்சித்தியுமென்னுமிருசத்திகளையுடைய விநாயகக்கடவுளையும் உயர்ச்சியுங் கூர்மையும் பொருந்திய வேற்படையைக்கொண்ட குமாரசுவாமியையும் ஈன்றருளிய உமாதேவியைப் பாகத்தில்வைத்தோய்—சித்தி அனைத்தும் நின் தொண்டர் தொண்டு ஆற்றச் செய் சீர்த்தியனே - சித்திகள் முழுதும் உனது அடியாரது ஏவல்புரியச்செய்கின்ற பெருங்கீர்த்தியையுடையாய்—சித்து இயல் நைத்து என்னைச் சடம் ஆக்கித் தெறு மலம் ஒசித்தி - சேதனத்தன்மையை மழுக்கி அடியேனை அசேதனப்பொருளாகச்செய்து கெடுக்கின்ற ஆணவத்தைத் தீர்த்தருள். எ - று. (௫௪)

சிரங்க வாணந் தருஞ்சொன் மகளிர்த் திளைத்தறநஞ்
சிரங்க வாணன் றனைமகிழ் காசிய தேவியமர்

சீரங்க வாணன் னெறியுய்த் தென்றாலவன்சேர்ப்பனும்மைச்
சீரங்க வாணன் பெறுதற் கரிய சிவபதத்தே.

இ-ள். சீரம் கவ் ஆணம் தரும் சொல் மகளிர்த் திளைத்து அற நஞ்சீர் - பாலின்றன்மையைக்கவ்விய அன்பைவிளைக்கின்ற வார்த்தையையுடைய மாதரை முயங்கி மிகவருந்திய மக்காள்—அங்க-என்பு மாலையையுடையோய்--வாணன்றனை மகிழ் காசிய - வாணாசுரனை மகிழ்ந்தருளிய காசிப்பதியோனே—தேவி அமர் சீர் அங்க - பார்ப்பதி தங்கிய சிறப்புவாய்ந்த திருமேனியாய்—நல் நெறி உய்த்து ஆள் என்றால் - நல்லவழியிற்செலுத்தி ஆண்டுகொள்ளாயென்று கூறின்--சீரங்கம் வாணன் பெறுதற்கு அரிய சிவ பதத்து அவன் உம்மைச் சேர்ப்பன் - திருவரங்கத்தில்வாழும் விட்டுணு அடையவொண்ணாத மங்களகரமானபதவியிலே அச்சிவபிரான் நுங்களைப் பொருந்தச் செய்வன். எ - று. (ருரு)

பதமுத்தி யங்க தபோதனர் பன்னியர் பாற்கொண்டதா
பதமுத்தி யங்கதர் துற்றுறுத் தின்பப் பழுவபருப்
பதமுத்தி யங்கத நாண்சிலை யாகப் படைத்துவந்தாய்
பதமுத்தி யங்கதன் மேற்பர முத்தியெற் பாலிப்பையே.

இ-ள். முத் தீ அங்கம் தபோதனர் பன்னியர்பால் பதம் கொண்ட தாபத - மூன்று அக்கினியாகிய அடையாளத்தையுடைய தாருகவனத்து இருடியரது பத்தினிமாரிடத்துச் சோற்றையேற்ற தவவேடத்தோனே—இயங்கு அதர் முத்துத் துற்று உறுத்து இன்பம் பழுவ - நடத்தற்குரிய வழியிலே தரளங்கள்நெருங்கி உறுத்துகின்ற ஆநந்தகானனத்தாய்—பருப்பதம் உத்தி அங்கதம் நாண் சிலை ஆகப் படைத்து உவந்தாய்-மேருமலையைப் படப்பொறியோடுகூடிய வாசுகிப்பாம்பாகிய நாணியைக்கொண்ட வில்லாகச்செய்து மகிழ்ந்தவனே—பத முத்தி அங்கு அதன்மேல் பர முத்தி என்

பாலிப்பை-பதமுத்தியாகிய அவ்விடத்துள்ள அப்பதவியின் மேற்பட்ட சாயுச்சியத்தை அடியேனுக்குத் தந்தருள்வாய். எ - று. (௫௬)

பையவந் தென்னை யிடையல்குன் மாதர் படிவமலப்
பையவந்தென்னைவெளிநோக்கிமான்றனன்பைம்பொற்குரும்
பையவந் தென்னை நறும்பொழிற் காசிநம் பாவிடைமேற்
பையவந் தென்னை யொருவார்த்தை காதிற் பணித்தருளே.

இ - ள். பை அ வந்து என் நை இடை அல்குல் மாதர் படிவம் மலம் பை - பாம்பின்படமும் அந்தக்காற்றும் என்று சொல்லத்தக்க வருந்துகின்ற மருங்குலையுங் கடிதடத்தையுமுடைய மகளிரது வடிவம் பவ்வீநிறைத்த பையாகும்—அவம் வெளித் தென்னை நோக்கி மான்றனன் - (அஃதுணராது) வீணே புறத்தழகைக்கண்டு மயங்கினேன் (இனியான் அத்தகையனுகாவண்ணம்)—பைம் பொன் குரும்பைய அம் நறும் தென்னைப் பொழில் காசி நம்பா - பசியபொன்போலும் இளநீரோடுகூடிய அழகிய நல்ல தென்னஞ்சோலையையுடைய காசிப்பதிக்கண்ணே நம்பனென்னுந்திருப்பெயர் புனைந்தோய்—விடை மேல் பைய வந்து என்னை ஒரு வார்த்தை காதில் பணித்தருள் - இடபவாகனத்தின்மீது மெல்ல எழுந்தருளி எனக்கு ஒப்பற்ற முத்திபஞ்சாக்கரமொழியைச் செவியில் உபதேசித்தருள்வாயாக. எ - று. (௫௭)

பணியம் பரிக்கு நறைதரு மார்தரிப் பார்புரக்கும்
பணியம் பரிக்கு மதவேள் பகைவர் நடுமறைநாப்
பணியம் பரிக்கும் வினையாளர் காசிப் பதிவதிவார்
பணியம் பரிக்குங் கரன்றுதை யார்மெய்ப் பரம்பொருளே.

இ - ள். பணி அம்பு அரிக்கு நறை தரும் ஆர் தரிப்பார்-அரவும் புனலும் வண்டுக்குத்தேனூட்டுகின்ற ஆத்திமலரும் என்னும் இவற்றையணிபவர்—புரக்கும் பணி அம்பர்-காக்குந்

தொழில்பூண்ட (விட்டுணுவாகிய) பகழியையுடையோர்—இக்கு மதம் வேள் பகைவர்-கரும்புவில்லையுஞ் செருக்கையுமுடைய மன்மதனுக்குத் தெவ்வர்—நடு மறை நாப்பண் இயம்பு அரிக்கும் வினையாளர் - மத்தியமாகிய யசுர்வேதத்தினடுவிலே கூறப்பட்ட கெடுத்தவினையையாளுதலுடையோர்—காசிப் பதி வதிவார் - காசித்தலத்துவாழ்வோர்—பணியம் பரிக்கும் கரன் தாதையார் - மோதகத்தைத் தாங்குகின்றகையையுடைய விநாயகக்கடவுளது தந்தையார்—மெய்ப் பரம் பொருள் - அவர் தத்துவபரப்பிரமமாவர். எ - று. (ருஅ)

பரசமை யத்திரி லோகஞ் சமைத்தவ பாணிபுனை
பரசமை யத்திரி வில்லீ யவிமுத்தப் பாலுறைவாய்
பரசமை யத்திரி பற்றசித் தாந்தத்தைப் பற்றப்பெற்றும்
பரசமை யத்திரி யாமென்செய் தாமுற் பவந்தவமே.

இ - ள். பர - மேலானவனே—சமையத் திரி லோகம் சமைத்தவ - பொருந்தும்படி மூன்றுலகத்தையும் படைத்தவனே—பாணி புனை பரச - கையிலணிந்த மழுவையுடையோய்—மை அத்திரி வில்லீ - மேகந்தவழ்தற்குரிய மலையாகிய சிலையாய்—அவிமுத்தப்பால் உறைவாய் - காசிப்பதிக்கண் வதிவோனே—பரசு அமை அத் திரிபு அற்ற சித்தாந்தத்தைப் பற்றப் பெற்றும் - புகழ்ச்சியமைந்த அந்த மாறுபாடொழிந்த சைவசித்தாந்தநெறியைச் சாரப்பெற்றேம்—பர சமயத்து இரியாம் - இனி அன்னியமதங்களிலே ஓடமாட்டேம்—முன் பவம் என் தவம் செய்தாம் - (யாம்) முன்னைப்பிறவிகளில் எத்துணைப்பெரிய நோன்பியற்றினேம், நீ கூறுவாயாக. எ - று. (ருகூ)

பவமாய வாழி யிதுபெறு கென்று பரிந்துகொடுப்
பவமாய வாழிப்பொற் றேர்குரற் கிந்தவ பாவம்பரி

பவமாய வாழியென் றெற்காக்குங் காசிய பல்லுயிர்க்கும்
பவமாய வாழி கடத்தும் புணைநின பாதங்களே.

இ-ள். பவ - பவனென்னுந்திருப்பெயரையுடையாய்— மாய ஆழி இது பெறுக என்று பரிந்து கொடுப்பவ - விட்டுணுவே சக்கரமாகிய இதனை வாங்கிக்கொள்கவென்றுரைத்து விரும்பி யீந்தவனே—மாயம் ஆழிப் பொன் தேர் சூரற்கு ஈந்தவ-வஞ்சனையோடுகூடிய உருளையுடைய பொன்னாலாகிய(இந்திரசாலத்)தேரினைச் சூரபன்மாவுக்கு வழங்கினோய்— பாவம் பரிபவம் மாய வாழி என்று என் காக்கும் காசிய - தீவினையும் அவமானமும் நீங்க வாழ்வாயாகவென்றுகூறி அடியேனையிரட்சிக்கின்ற காசித்தலத்தாய்—நின பாதங்கள் பல் உயிர்க்கும் பவம் ஆய ஆழி கடத்தும் புணை - உன்னுடைய திருவடிகள் பலவேறுவகைப்பட்ட ஆன்மாவுக்கும் பிறப்பாகிய கடலைத் தாண்டுவிக்கும் மரக்கலமாம். எ - று.()

பாதக மஞ்சு முதிர்மா லயற்கரும் பண்பனகப்
பாதக மஞ்சு பொறுக்கு மவிமுத்தன் பக்கற்றிரும்
பாதக மஞ்சு மவன்புகழ் வாய்சொலப் பாழ்த்தமெய்யாற்
பாதக மஞ்சு மிழைத்தேற் கெவ்வாறுய்யும்பான்மையுண்டே.

இ - ள். பாதம் கம் மஞ்சு முதிர் மால் அயற்கு அரும் பண்பன் - அடியும் முடியும் அழகு மிக்க விட்டுணுவுக்கும் பிரமனுக்கும் (காண்டற்கு) அரிய நற்குணத்தோன்—அகப்பா தக மஞ்சு பொறுக்கும் அவிமுத்தன் பக்கல்-மதில் தகுதிபெற மேகத்தைச்சுமத்தற்குக் காரணமான காசிப்பதியோன், அவன்மாட்டு—அகம் திரும்பாது - (பிரபஞ்சத்துச் சென்ற என்து) மனம் மீளாதாயிற்று—அவன் புகழ் சொல வாய் அஞ்சும் - அப்பெருமானது கீர்த்தியையுரைத்தற்கு வாயும் வெருவாநின்றது—பாழ்த்த மெய்யால் பாதகம் அஞ்சும் இழைத்தேற்கு உய்யும் பான்மை எவ்வாறு உண்டு -

பாழான உடம்பினுல் ஐம்பெரும்பாவமுஞ்செய்த எனக்குப் பிழைக்குந்தன்மை எவ்வழியால் உளதாம். எ - று. (௬௧)

பாலை வனமது கைதீர்த்த வின்மொழிப் பைந்தொடியோ
பாலை வனமது தீயூழிற் போயினள் பாங்கர்மலைப்
பாலை வனமது வூண்மலி காசிப் பரனருளாற்
பாலை வனமது தண்பணை யாகவப் பாசிழைக்கே.

இ-ள். பாலை வனம் மதுகை தீர்த்த இன் மொழிப் பைந் தொடி ஓ பாலை - பாவின்சுவையை அழகிய வெற்றியினீக்கிய இனியசொல்லையும் பசியவளையலையுமுடையாள், ஐயோ மிக இளமைப்பருவத்தாள் (அங்ஙனமாகவும்)—வல் நமது தீ ஊழின் போயினள் - வலிய எம்முடைய கொடிய பழவினை யினுலே (ஓராடவனுடன்) சென்ருள்—பாலை வனமது - (அவள்சென்ற) பாலைநிலக்காடு—பாங்கர் மலைப்பால் ஐவனம் மது ஊண் மலி காசிப் பரன் அருளால் - பக்கத்துள்ள குறி ஞ்சிநிலத்தில் மலைநெல்லுந் தேனுமாகிய உணவுமிக்க காசிக் கட் சிவபிரானது திருவருளால்—அப் பாசு இழைக்குத் தண் பணை ஆக - அப்பெண்ணுக்குக் குளிர்ந்த மருதநிலமாகுக. எ - று. அது - பகுதிப்பொருள்விகுதி. (௬௨)

பாச வலையுட் சுழல்வேனைத் தேற்றனின் பாரநிரா
பாச வலையு முனிகுழ னீள்கட் பசும்பொலங்கார்ப்
பாச வலையு நுழையிடைக் காரிகை பாககன்னற்
பாச வலையுண் விநாயக னத்த பசுபதியே.

இ - ள். நிராபாச - ஒப்பில்லாதாய்—அலையும் முனி குழல் நீள் கண் பசும் பொலம் கார்ப்பாசம் அலையும் நுழை இடைக் காரிகை பாக - இருளையும் வெகுளுகின்ற கூந்தலும் நீண்டவிழியும் பசிய பீதாம்பரத்தைத்தரித்த அசையாநின்ற நுண்ணிய மருங்குலும் என இவற்றையுடைய உமாதேவி

பங்கனே—கன்னல் பாசு அவலை உண் விநாயகன் அத்த - சருக்கரையோடுகூடிய பூச்சையவலை அருந்துகின்ற கணபதிக்குப் பிதாவே—பசுபதி - பசுபதியென்னுந் திருப்பெயர் புனைந்தோய்—பாசம் வலையுள் சுழல்வேனைத் தேற்றல் நின் பாரம் - (ஐவகைப்) பாசமாகிய வலையினகத்து உழலாநின்ற என்னை (அந்நிலையினீக்கித்) தெளிவிப்பது உனது கடமையாம். எ - று. (௬௩)

பசுவர்க்க மைய தனியூர்தி மாலை பலிபுசிப்பென்
பசுவர்க்க மைய வெழுதோவ மாடப் படிவழிந
பசுவர்க்க மையின் றுற்றேத்துங் காசியெம் பண்ணவற்குப்
பசுவர்க்க மையல் பறைத்தாள வெண்ணும் பரிசிச்சையே.

இ-ள். சுவர்க்கு அமைய எழுது ஓவம் மாடம் படி வழி நபம் சுவர்க்கம் ஐயம் இன்று உற்று எத்தும் காசி எம் பண்ணவற்கு-சுவருக்குப் பொருந்தவெழுதிய சித்திரத்தையுடைய மாளிகையின் சோபானமார்க்கத்தால் ஆகாயத்துள்ள பொன்னகர்ப்புத்தேளிர் சந்தேகமின்றி வந்து வழிபடுதற்குக்காரணமான காசிக்கண் எழுந்தருளியிருக்கின்ற எமதுகடவுளுக்கு—பசு வர்க்கம் மையல் பறைத்து ஆள எண்ணும் பரிசு இச்சை - சீவராசியை மயக்கத்தினீக்கி ஆட்கொள்ள நினைக்குந்தன்மை விருப்பமாம்—பசு அர்க்கம் ஐய தனி ஊர்தி மாலை - இடபமும் எருக்கலருமாகிய இவை அழகிய ஒப்பற்ற வாகனமுந் தாருமாம்—பலி புசிப்பு என்ப - பிச்சைச்சோறு உணவாம் என்று சொல்லுவார் பெரியோர். எ - று. (௬௪)

பரிபாக காலை வழுதோ திளவல் படர்கென்றிகம்
பரிபாக கால களத்தாய் வழுதிமுற் பண்டியக்கும்
பரிபாக காலம் புயகாசி யீசவிப் பாவிக்குநீ
பரிபாக கால முறுவித்துச் சத்தி பதிவிரைந்தே.

இ - ள். ஆக அமுது கால ஓது இளவல் பரிபு படர்க என் திகம்பரி பாக - பெருச்சாளிவாகனத்தாய் அமிர்தமொழுக வசனிக்கும் இளையோய் (நீயிருவரும்) விரும்பி வருக வென்றழைக்கின்ற பார்ப்பதி பங்கனே—கால களத்தாய் - கரியகண்டத்தையுடையோய்—வழுதி முன் பண்டு இயக்கும் பரி பாக - பாண்டியற்கு எதிரே மேனாள் நடாத்திய குதிரைப்பாகனே—கால் அம்புயம் காசி ஈச - பாதாரவிந்தத்தையுடைய காசிப்பதியதிபா—நீ இப் பாவிக்குப் பரிபாக காலம் உறுவித்து விரைந்து சத்தி பதி - நீ இந்தப் பாவகாரியாகிய எனக்குப் பக்குவச்செவ்வியைப் பொருந்தச்செய்து விரைவாகச் சிற்சத்தியைப் பதித்தருள். எ - று. (சுரு)

விரையாக் கலிபுக வொண்ணு வவிமுத்த மேய்வழைக
விரையாக் கலிவரு கங்கை படிந்தந்தில் வீற்றிருப்ப
விரையாக் கலிபிழை யாதார்க் கிளமையை மீட்டுதவி
விரையாக் கலியுறழ் வாயுமை கோன்கழல் வேட்கையரே.

இ - ள். விரையாக்கலி பிழையாதார்க்கு இளமையை மீட்டு உதவி - திருவாணையிற்றவறுத திருநீலகண்டநாயனுருக்கு யௌவனத்தை மறித்தும் நல்கினேன்—விரை ஆக்கு அலி உறழ் வாய் உமை கோன் - மணத்தை விளைக்கின்ற அல்லிப்பூப்போலும் வாயையுடைய பார்ப்பதிக்குத் தலைவன்—கழல் வேட்கையர் - அவனது திருவடிப்பேற்றில் விருப்பமிக்கோர்—கலி புக ஒண்ணு அவிமுத்தம் விரையா மேய் - கலிபுருடன் நுழைதற்கரிய காசியை விரைந்து அடைந்து—வழை கவிர் ஐ ஆ கலி வரு கங்கை படிந்து - சுரபுன்னையும் முண்முருக்கும் அழகிய ஆச்சாவுமென் இம்மரங்களை அகழ்ந்துவருகின்ற கங்கையாற்றின் மூழ்கி—அந்தில் வீற்றிருப்ப - அத்தலத்திலே பெருமிதத்தோடு தங்குவார். எ - று. (சுசு)

கைக்க வளக்கரி தாமன்பின் வாக்கிறை கன்மிதப்பு
கைக்க வளக்கரி னல்கினன் காசிக் கடிநகர்வாய்க்
கைக்க வளக்கரி செற்றோ னிரங்கக் கனியியறோ
கைக்க வளக்கரிக் கொக்குமென் றெய்துபுன் காமநெஞ்சே.

இ - ள். நெஞ்சே - மனமே—அளக்க அரிது ஆம் அன்பின் வாக்கிறை கல் மிதப்பு அளக்கரில் உகைக்க நல்கினன் - அளவுபடுத்த அரிதாகிய அன்பையுடைய திருநாவுக்கரசுநாயனர் கல்லாலியன்ற தெப்பத்தைக் கடலிற்செலுத்தும்படியருளினேன்—கடிக் காசி நகர்வாய்க் கைக் கவளம் கரி செற்றோன் இரங்க - காவலைக்கொண்ட காசிப்பதிக்கண்ணே துதிக்கையையும் கவளவுணவையுமுடைய யானைவடிவான அசுரனைக் கொன்றவன் (அவன்) கருணைசெய்தற்பொருட்டு—கனி இயல் தோகைக்கு அவள் அக்கு அரிக்கு ஒக்கும் என்று எய்து புன் காமம் கைக்க - பெண்ணின் சாயல் மயிலுக்கும் அவளதுகண் வண்டுக்கும் நிகராகுமெனக்கூறிப் பெறுகின்ற சிற்றின்பத்தை வெறுப்பாயாக. எ - று. (சுஎ)

காம ரசத்தினைக் கேகயத் தோடு கடவிடுங்கு
காம ரசத்தி மிகுத்தாயென் றற்பர்க் கழறிக்குறு
காம ரசத்தி நிழற்றவி முத்தன் கழல்கும்பிட்டாங்
காம ரசத்திற் குருகாஞ் சிவாநந்தங் கைகண்டதே.

இ - ள். காமர் அசத்தினைக் கேகயத்தோடு கடவிடும் குகா - அழகிய ஆட்டுக்கடாவை மயிலோடு செலுத்துகின்ற குமாரசுவாமீ—மர சத்தி மிகுத்தாய் - மன்மதன்போலும் ஆற்றல் மிக்கோய்—என்று அற்பர்க் கழறிக் குறுகாம் - என்று இழிந்த மாந்தரைப் (புகழ்ந்து)கூறிச் செல்லேம்—அரசு அத்தி நிழற்று அவிமுத்தன் கழல் கும்பிட்டாம் - அரசமரமும் அத்திமரமும் நிழலைச்செய்கின்ற காசிப்பதிக்கட் சிவபிரானது திருவடியை வணங்கினேம்—காம ரசத்திற்கு உரு

காம் - காமச்சுவையின்பொருட்டு மனங்கரையமாட்டேம்—சிவ ஆநந்தம் கைகண்டது - (ஆதலால் எமக்குச்)சிவாநந்தஞ் சித்தித்தது. எ - று. (சுஅ)

கண்ட வனிதைய நையாமைக் கங்கை கபர்த்தநின்று
கண்ட வனிதை வரவுய்த்த காசிக் கடவுளெற்குக்
கண்ட வனிதை வளவரை யீர்ம்பொழிற் கட்டமியேன்
கண்ட வனிதையைக் காணினிஃ கூறலை காதலனே.

இ - ள். காதலனே - பாங்கனே—கண் தவன் இதயம் நையாமைக் கங்கை கபர்த்தநின்று உகண்டு அவனி தைவர உய்த்த காசிக் கடவுள் - மதிக்கத்தக்க தவத்தையுடைய பகீரதன் மனம்வருந்தாவண்ணங் கங்காநதியைச் சடையினின்றும் தாவிப் பூமியிலே தவழும்படி விடுத்த காசிப்பதியிற் சிவன்—எற்குக் கண்டு அவன் - அடியேனுக்குக் கற்கண்டு போல்வான்,அவனது—இதை வளம் வரை ஈர் பொழிற்கண்-கொல்லைவளப்பத்தையுடைய மலையைச்சார்ந்த குளிர்ச்சி பொருந்திய சோலையினிடத்து—தமியேன் கண்ட வனிதையைக் காணின் இவ் கூறலை - தனித்த என்னாற் பார்க்கப்பட்ட நங்கையை நீ பார்த்தால் இத்தகைய இன்னுமொழிகளை உரைப்பாயல்லை. எ - று. (சுகூ)

காத மணக்குமை யாப்பிற்றென் றெள்ளியக் கள்வரின்வி
காத மணக்குமை யாதுவெல் லப்பர் கவிபுகுதுங்
காத மணக்குமை யாமலை மங்கையைக் காவென்றன்னேற்
காத மணக்குமை யார்சோலைக் காசியிற் காண்மின்களே.

இ - ள். காது அமண் மையாப்பிற்று என்று நக்கு எள்ளி - (சார்ந்தாரைக்) கெடுக்கின்ற சமண்மதம் மயக்கமுடைத்தென் றுகூறிச் சிரித்து (அதனை) யிகழ்ந்து—அக் கள்வரின் விகாதம் அணக் குமையாது வெல் அப்பர் கவி புகு

தும் காத - அந்த வஞ்சமதத்தரால் இடையூறுகள் சார அழியாமல் அவற்றைவென்ற திருநாவுக்கரசுநாயனாரது தேவாரப்பாசுரம் நுழைதற்குரிய திருச்செவியுடையாய்—மலை மங்கையை மணக்கும் ஐயா - பார்ப்பதியைக் கல்யாணம்புரிந்து கொண்ட ஆரியனே—கா என்று - பாதுகாத்தருளெனத் துதித்து—காதம் மணக்கும் மை ஆர் சோலைக் காசியில் அன்னோன் காண்மின்கள் - யோசனையளவு பரிமளம்வீசுகின்ற மேகம்பொருந்திய பொழிலையுடைய காசிப்பதியினிடத்து அச்சிவபிரானைத் தரிசனஞ்செய்யுங்கள். எ - று. (எ0)

காணி யதிகம் படிற்காணி யோடு கருவங்கொண்டூர்க்
காணி யதிகம் பயன்சற் றுடைத்தெய்வங் கைதொழுமக்
காணி யதிகம் பலைக்கங்கை யாடுதல் காசிவைகல்
காணி யதிகம் பரற்சேர் வெனக்கொள்க காலத்தினே.

இ - ள். காணியோடு காணி அதிகம் படின் கருவம் கொண்டு - காணிப்பொன்னுடன் (மீட்டும்) காணிப்பொன் மிகுதியாகவந்தால் இறுமாப்புற்று—ஊர்க் காணியது இகம் சற்றுப் பயன் உடைத் தெய்வம் கைதொழும் மக்காள் - கிராமவுரிமையைக்கொண்டதாகிய இம்மையிலே சிறிதுபயன் றருதலுடைய அற்பதேவதையை வழிபடுகின்ற மாந்தர்களே—நியதி கம்பலைக் கங்கை ஆடுதல் காசி வைகல் திகம்பரன் காணிய சேர்வு என - நியமமாவன ஒலியோடுகூடிய கங்காநதியிலே மூழ்குதலும் காசிப்பதிக்கண் வாழ்தலுஞ் சிவபிரானைத் தரிசித்தற்பொருட்டுக் (கோயிலை) அடைதலும் ஆகுமென்று—காலத்தின் கொள்க - இளமைப்பருவத்திலே கொண்டொழுகுவீராக. எ - று. (எக)

காலங் கடக்கு நெறிமே னெறிச்சென்றெக் காலுறுகோ
காலங் கடக்குஞ் சரவுரி போர்த்தவன் கங்கையின்வாய்க்

காலங் கடக்குங் குமஞ்சா யவிமுத்தன் கண்ணவொண்ணுக்
காலங் கடக்கும் பிரானொடொற் றிக்குங் கலவியையே.

இ - ள். கால் அம் கடம் குஞ்சரம் உரி போர்த்தவன் - வழிகின்ற அழகிய மதத்தோடுகூடிய யானைத்தோலை ஏகாசமிட்டவன்--கங்கையின் வாய்க்கால் அம் கடக் குங்குமம் சாய் அவிமுத்தன் - கங்காநதியினது கால்வாய்ப்புனல்பறித்தலாற் குங்குமமரஞ் சாய்ந்து வீழ்தற்கு இடமாகிய காசிப்பதியோன்—கண்ண ஒண்ணுக் காலம் கடக்கும் பிரானொடு ஒற்றிக்கும் கலவியை - நினைத்தற்கரியகாலத்தை யதிக்கிரமித்த இறைவன், அவனோடு ஐக்கியமாகும் அத்துவிதப்புணர்ச்சியின்பத்தை—கால் அங்கு அடக்கும் நெறி மேல் நெறிச் சென்று எக் கால் உறுகோ - பிராணவாயுவை அச்சுழுமுனையின்கண் ஒடுக்குதற்குரிய யோகவழிக்கு மேற்பட்ட ஞானமார்க்கத்திலொழுகி யான் எப்பொழுது அடைவேனோ அறியேன். எ - று. (எஉ)

கலங்கா தவரை யிகழ்ந்தொளிர் மாளிகைக் காற்பெருமங்
கலங்கா தவரை யியங்கேட்ப வாற்றுறுங் காசியன
கலங்கா தவரை முலைபாகன் வெற்பிற் கடல்பொங்கினுங்
கலங்கா தவரைக் கலக்கங்கண் டாளிந்தக் காரிகையே.

இ - ள். கல் அங்கு ஆதவரை இகழ்ந்து ஒளிர் மாளிகைக்கால் காதம் வரை இயம் கேட்ப பெரு மங்கலம் ஆற்றுறும் காசியன் - மணிகள் அவ்விடத்துள்ள சூரியரை யெள்ளி விளங்குதற்குரிய மாடத்தின்கண்ணே காவதத்தளவு வாச்சியவொலி செவிக்குப் புலப்படுமாறு கலியாணஞ்செய்தற்குக் காரணமாண காசிப்பதியோன்—அகலம் காத வீரு ஐ முலைபாகன் வெற்பில் - தனது மார்பம் மோதுதலால் வளரும் அழகிய கொங்கையையுடைய உமாதேவிபங்கன், அவனது மலையிலே—கடல் பொங்கினும் கலங்காதவரைக் கலக்கம்

கண்டாள் இந்தக் காரிகை - முந்நீர் (உலகழிப்ப) பெருகியெழுந்தாலும் மறுக்கமுறாத தலைவரை மறுகும்படி செய்தவள் இப்பெண்ணேயாம். எ - று. (எ௩)

காரிகை யார்தன நோக்காது காசிக் கடவுளவி
காரிகை யார்தன தின்புறச் செய்யும காணிரகங்
காரிகை யார்தன மேய்ப்பவ னையைந்து காட்டுருவக்
காரிகை யார்தனங் கண்ணின் பயனென்ப கற்றவரே.

இ - ள். காரிகையார் தனம் நோக்காது - மகளிர்முலைகளை விரும்பாமல்—காசிக் கடவுள் - காசிப்பதித்தேவன்—அவிகாரி - வேறுபாடில்லாதவன்—கையார் தனது இன்பு உறச் செய்யும் மகான் - வெறுக்காத அடியார் சிவாநந்தத்தையடைய அருள்புரிகின்ற பெரியோன்—நிரகங்காரி கை ஆர் தனம் ஏய்ப்பவன் - அகந்தையில்லோனுக்குக் கரத்திற் பொருந்திய பொருளையொத்தவன், அவனது—ஐயைந்து காட்டு உருவம் காரிகை ஆர்தல் நம் கண்ணின் பயன் என்ப கற்றவர் - இருபத்தைந்துபேதத்தைக் காட்டுகின்ற மூர்த்தியினது அழகை யநுபவித்தலே நம்முடைய விழிகளானுய பிரயோசனமென்று சொல்லுவர் கற்றுவல்லோர். எ - று. ()

கற்றவ ராயினவ் வாய்ச்சிக்குச் சேய கழலிணைக்கேக்
கற்றவ ராயினர்க் கண்மைய காசிக் கருத்தபிறங்
கற்றவ ராயின நாயேற் கிரங்கிலை காழ்த்தவுன்னைக்
கற்றவ ராயி னருண்மேவி யென்று கழறலென்னே.

இ - ள். கல் தவர் ஆயின் அ ஆய்ச்சிக்குச் சேய - கல்லையொத்த (சலியா நிலையினையுடைய) தாபதர் ஆராயப்புகின் அந்த ஆராய்ச்சிக்குத் தூரத்துள்ளோய்—கழல் இணைக்கு ஏக்கற்றவர் ஆயினர்க்கு அண்மைய - இரண்டு திருவடிக்கும் பேராசையுற்றோராகிய மெய்யன்பர்க்கு மிகச் சமீபித்தவனே—காசிக் கருத்த-காசித்தலைவா—பிறங்கல் தவராய்-மலை

வில்லீ—இனம் நாயேற்கு இரங்கிலை - இன்னமும் நாய்போன்ற எனக்குக் கருணைசெய்திலாய் (அவ்வண்ணமாகவும்)—கற்றவர் காழ்த்த உன்னை ஆயின் அருள் மேவி என்று கழறல் என் - நூலறிவுடையார் வயிரித்த நின்னைத் தாயினுந் தயையியைந்தோனெனச் சொல்வது யாதுகாரணத்தால். எ - று.

கழக மலியுந் தெருச்சென்மின் னார்முக காந்தியினா
கழக மலியுங் குவளையு மிக்கலர் காசியவி
கழக மலியும் பருமூடி யிம்பர்க் கவிபெரும்பு
கழக மலியும் பலைப்போற்றி வெள்கநிற் காட்டென்னையே.

இ - ள். கழகம் மலியும் தெருச் செல் மின்னார் முகம் காந்தியின் - கல்விச்சங்கம் மிக்க வீதியிலே இயங்குகின்ற மகளிரது முகவொளியால்—அகழகம் அலியும் குவளையும் மிக்கு அலர் காசிய - அகழியினிடத்து ஆம்பலும் நெய்தலும் அதிகரித்து மலர்தற்குக்காரணமான காசிப்பதியோய்—இகழ் அகம் அலி - பழிக்கத்தக்க பாவமில்லாதவனே—உம்பரும் மூடி இம்பர்க் கவி பெரும் புகழ - வானத்தையும்போர்த்து இவ்வுலகையும் போர்த்த பெரிய சீர்த்தியுடையாய்—கமலி உம்பலைப் போற்றி வெள்க என்னை நின் காட்டு - தாமரை மலரிலுள்ள பிரமனுங் கயேந்திரனைக்காத்த விட்டுணுமூர்த்தியும் நாணுற அடியேனுக்கு உன்னைத் தெரியச்செய்தருள். எ - று. (எசு)

என்னையஞ் சாதி மணிமாடக் காசியி லீசன்வடி
வென்னையஞ் சாதிய பல்பேத மூர்த்தியு மேத்துகின்றே
னென்னையஞ் சாதித் தடங்கொடுங் கூற்றுவ னேற்றவெல்லை
யென்னையஞ் சாதிரு வென்றப் பரம னியம்புதற்கே.

இ - ள். எல் நை அம் சாதி மணி மாடம் காசியில் - ஞாயிற்றை வருத்துகின்ற அழகிய சாதிரத்தினத்தாலாகிய மாளிகையையுடைய காசிப்பதிக்கண்ணே—ஈசன் வடிவு

என் ஐயஞ்சு ஆதிய பல் பேதம் மூர்த்தியும் எத்துகின்றேன் - சிவபிரானது உருவென்றுசொல்லப்பட்ட இருபத்தைந்து முதலிய பலவேறுவகைப்பட்ட திருமேனிகளையுந் தொழாநின்றேன், (ஆதலால்)—அடம் சாதித்துக் கொடும் கூற்றுவன் எற்ற எல்லை - உட்பகையைமுடித்தற்குக் கொடிய இயமன் எதிர்த்தகாலத்தில்—என்னை அஞ்சாது இரு என்று அப் பரமன் இயம்புதற்கு ஐயம் என் - அடியேனைநோக்கி வெருவாதிருத்தியென அந்தச் சிவபிரான் கூறுதற்கு ஐயுறவு யாதுளது. எ - று. (எஎ)

புதவம் பலவ நறும்பொழிற் றென்றல் புகப்பொன்செய்யற்
புதவம் பலவ னடியார்க் கெளியன் புராந்தகன்புற்
புதவம் பலவ னணிந்தவன் காசியுட் போகியபின்
புதவம் பலவன் புறவாற்ற லெற்றுக்குப் பூதலமே.

இ - ள். பூதலமே - பூமியின்கண் மக்காள்—புதவம் பலவம் நறும் பொழில் தென்றல் புகப் பொன் செய் அற்புதம் அம்பலவன் - வாயிலிலே தளிர்பொருந்திய நறிய சோலையையளாவிவருதற்குரிய மந்தமாருதம் புகும்படி கனகத்தாலியற்றப்பட்ட ஆச்சரியகரமான சபையையுடையோன்—அடியார்க்கு எளியன் - திருத்தொண்டர்க்குத் தஞ்சமாயுள்ளான்—புர அந்தகன் - திரிபுரத்துக்கும் இறுதியைப்புரிந்தவன்—புற்புதம் அம்பு அலவன் அணிந்தவன் காசி உள்-குமிழியைக்கொண்ட புனலையுந் திங்களையும் வேய்ந்தோன், அவனது காசித் தலத்தினுள்ளே--போகிய பின்பு பல தவம் வன்பு உற ஆற்றல் எற்றுக்கு - சென்றபின்னர் அநேகதவங்களை வன்மைபொருந்தச் செய்வது எதன்பொருட்டு. ஒருதவமுஞ்செய்தல் வேண்டாவென்றபடி. எ - று. (எஅ)

பூதரங் காக்கு மணந்தாக்குங் காசிப் புனிதனிறும்
பூதரங் காக்கு மரன்சால்பு கேட்டெய்தும் பூவைபங்கன்

பூதரங் காக்கும் பிலவாயை நோக்கிப் புலவர்வெரூஉம்
பூதரங் காக்கும் பெருமான் குரவன் புகலெமக்கே.

இ - ள். பூ மணந்து காக்குத் தரம் ஆக்கும் காசிப் புனிதன் - மலர்கள் பரிமளித்துச் சோலைக்கு மேன்மையை விளைத்தற்கிடமாகிய காசிப்பதியிலுள்ள தூயோன்—அரங்காக் குமரன் சால்பு கேட்டு இறும்பூது எய்தும் பூவை பங்கன் - கெடாத முருகக்கடவுளது நற்குணநிறைவைத் திருச்செவி சார்த்தி வியப்படையாநின்ற பார்ப்பதி பாகன்—பூதர் அங் காக்கும் பிலம் வாயை நோக்கிப் புலவர் வெரூஉம் பூதரம் காக்கும் பெருமான் குரவன் எமக்குப் புகல் - கணங்கள் திறக்கின்ற குகைபோலும் வாயைப்பார்த்துத் தேவர் அஞ்சுதற்குக்காரணமான கயிலைமலையைக் காவல்புரியும் நந்திபிரானுக்கு ஆசிரியன், அவன் எங்கட்குப் பற்றுக்கோடாவான். எ - று. (எகூ)

புகலி யமருஞ்சம் பந்தன பூண்முலை யாளருமுன்
புகலி யமருஞ்சம் பந்தரங் காசி புகேமென்றஞ்சிப்
புகலி யமருஞ்சம் பந்தமி லாதவன் பொன்னருளாற்
புகலி யமருஞ்சம் பந்தர்நி றீஇய புகழ்ச்சைவமே.

இ - ள். இயமரும் சம் பந்து அன பூண் முலை ஆளரும் - கூற்றுவனுஞ் சுகத்தைத்தருகின்ற கந்துகம்போன்ற கலனணிந்த கொங்கையைக்கொண்ட காலாளையுடைய மன்மதனும்—முன்பு கலி அமர் உஞ்சம் - முற்காலத்து மிக்க போரிலேயாம் பிழைத்தேம் (ஆதலால் இனி)—பந்தர் அம் காசி புகேம் - காவணத்தையுடைய அழகிய காசிப்பதியுள் நுழையேம்—என்று அஞ்சிப் புகலிய மரும் சம்பு - என வெருவிக் கூறும்படி (அப்பதியில்) வீற்றிருக்கின்ற சம்புவென்னுந்திருப்பெயரையுடையோன்—அந்தம் இலாதவன் பொன் அருளால் - நாசரகிதன், அவனது பொன்போலுங் கருணையி

ஞலே—புகலி அமரும் சம்பந்தர் நிறீஇய புகழ்ச் சைவமே புகல் - சீகாழித்தலத்திற்றங்கிய திருஞானசம்பந்தமூர்த்தியால் நிலைநிறுத்தப்பட்ட சைவசமயமே பற்றுக்கோடாம். எ - று. (அ0)

சைவசித் தாந்த நெறிநின்று காசித் தடம்பதிமி
சைவசித் தாந்த மராத்தொண்டர்ப் பெற்றனந் தையலரி
சைவசித் தாந்த ரியமலந் தீர்ந்துந் தழாறிண்ணங்கு
சைவசித் தாந்த னறிவுக்கெட் டாச்சிவன் முண்மலரே.

இ - ள். சைவ சித்தாந்தம் நெறி நின்று காசித் தடம் பதிமிசை வசித்தாம் - சித்தாந்தசைவமார்க்கத்திலே நிலைத்தொழுகிக் காசியாகிய பெரிய தலத்தின்கண் வைகினேம்—தொண்டர் தமராப் பெற்றனம் - திருத்தொண்டரைச் சுற்றத்தாராகப் பெற்ளும்—தையலர் இசைவு அசித்து - மகளிரது புணர்ச்சியை இகழ்ந்து சிரித்து—ஆந்தரிய மலம் தீர்ந்தும் - உள்ளேகலந்துநிற்கும் ஆணவத்தினீங்கினேம் (ஆதலால் யாம்)—குசை வசித்து ஆம் தன் அறிவுக்கு எட்டாச் சிவன் தாள் மலர் தழால் திண்ணம் - தருப்பைநுனிபோன்ற கூரிதாகிய தற்போதத்துக்கு அகப்படாத சிவபிரானது திருவடித்தாமரையையடைவது ஒருதலையாம். எ - று. (அக)

தாளகங் கந்தகந் தீக்கண் டெனப்பவஞ் சாப்பரிபூந்
தாளகங் கந்தகன் சூழ்மழு வாள தலைமிலைகூ
தாளகங் கந்தகக் கொய்காசி யாயுனைச் சாற்றிடைப்பார்த்
தாளகங் கந்தக னின்புயத் தேசென்று தங்கின்றன்றே.

இ - ள். தாளகம் கந்தகம் தீக் கண்டு எனப் பவம் சாப் பரி பூ தாள - அரிதாரமுங் கந்தகமும் அக்கினியைப்பார்த்தோடுவதுபோலப் பிறப்பும் இறப்பும் நீங்குவதற்குக்காரணமான மலர்போலுந் திருவடியாய்—கங்கு அந்தகன் சூழ் மழுவாள - பருந்தும் இயமனும் (பகைவர் ஊனுமுயிருங்கிடைப்

பதுபற்றிச்) சுலவுதற்குரிய மழுப்படையோய்—தலை மிலை கூதாள - முடியிலணிந்த கூதாளப்பூவையுடையாய் —கம் கம் தகக் கொய் காசியாய் - பிரமன்றலையைத் தகுதிபொருந்தக் கிள்ளிய காசிப்பதியோய்—உனைச் சாற்றிடைப் பார்த்தாள் அகம் கந்து அகல் நின் புயத்தே சென்று தங்கின்று - நின்னைத் திருவிழாப்பவனியிலே நோக்கிய மங்கையினெஞ்சு தூண்போன்ற அகன்ற உனது தோளிடத்தே புகுந்து வைகிற்று. எ - று. சா - முதனிலைவினைப்பெயர். (அஉ)

தங்க விலங்குவிட் போக மெனவதன் சார்வெறுப்புத்
தங்க விலங்கு பராநந்த முப்புரத் தானவர்வ
தங்க விலங்கு குனித்தவி முத்தத் தலத்திடைமா
தங்க விலங்கு செகுத்தான்கண் வேண்டுவர் சான்றவரே.

இ - ள். சான்றவர் - நிறைவுடையபெரியோர்—விண் போகம் தங்கம் விலங்கு என அதன் சார் வெறுப்புத் தங்க - சுவர்க்காநுபவம் பொன்விலங்குபோலுமென்று எண்ணி அதன்கண் உவர்ப்புண்டாகாநிற்க—மு்ப் புரம் தானவர் வதங்க வில் அங்குக் குனித்து - திரிபுரத்தசுரர் வாடும்படி மேருச்சிலையை அவ்விடத்தேவளைத்து—அவிமுத்தம் தலத்திடை மாதங்கம் விலங்கு செகுத்தான்கண் - காசிப்பதியினிடத்து யானையாகிய மிருகத்தைக் கொன்ற சிவபிரான்மாட்டு—இலங்கு பர ஆநந்தம் - (அழியாது) விளங்குகின்ற மேலான ஆநந்தத்தை—வேண்டுவர் - குறையிரப்பர். எ-று.

சாலத் தருக்க னயர்வுயிர்ப் பான்வைகத் தண்டலைவி
சாலத் தருக்க ணிழற்றிடுங் காசியெந் தாய்நடிக்குஞ்
சாலத் தருக்கரி யாய்நூற் பொருள் சாற்றிநக்கோர்
சாலத் தருக்கம் புரிவேற்கின் றுங்கொனின் றண்ணளியே.

இ - ள். சாலத்து அயர்வு உயிர்ப்பான் அருக்கன் வைக - மதிலிலே சிரமபரிகாரத்தின்பொருட்டுச் சூரியன்

தங்காநிற்க (அவனுக்கு)—தண்டலை விசாலம் தருக்கள் நிழற்றிடும் காசி எந்தாய் - பொழிலின்கண்ணே பரப்போடு கூடிய மரங்கள் நிழலைச்செய்தற்கிடமாகிய காசிக்கண் எமது பிதாவே—நடிக்கும் சாலத்தருக்கு அரியாய் - (மெய்போல) நாடகஞ்செய்கின்ற மாயமுடையார்க்கு அரியோனே—தக்கோர் அருள் நூல் பொருள் சாற்றில்-தகுதிமிக்கோர் ஆகமப்பயனைச் சொன்னால்—சாலத் தருக்கம் புரிவேற்கு இன்று நின் தண் அளி ஆம் கொல் - மிகத்தருக்கஞ்செய்கின்ற எனக்கு இப்பொழுது உன்து தண்ணியகருணை உண்டாகுமோ. எ - று. (அச)

அளியரை யாண்டவர் காசியுள் ளார்கொன்றை யாரத்திசை
யளியரை யாண்டவர் சாருமுன் ஞான வமுதருத்து
மளியரை யாண்டவர்க் காமலர் கொய்தி யகில்சந்துநீ
ரளியரை யாண்டவ மானமென் றெண்ணற்க வாய்மனமே.

இ - ள். ஆய் மனமே - ஆராயுமியற்கையையுடைய நெஞ்சமே—அளியரை ஆண்டவர் - எளியோரை யாட்கொள்பவர்—காசி உள்ளார் - காசிப்பதியிலிருப்பவர்—கொன்றை ஆரத்து இசை அளியர் - கொன்றைப்பூமாலையிற் பாடுகின்ற வண்டுகளையுடையார்—அவர் ஐ ஆண்டு சாரும் முன் - அத்திருஞானசம்பந்தப்பிள்ளையார் ஐந்துவருடத்தையடைதற்கு முன்னே—ஞானம் அமுது அருத்தும் அளியர் - (அப்பிள்ளையாருக்கு) ஞானப்பாலுணவையூட்டிய கருணையோர்—ஐ ஆண் தவர்க்கு-அழகினையும் ஆண்டன்மையையுமுடைய நாயகர், அவருக்கு—ஆம் மலர் கொய்தி - உரியவாகிய பூக்களைப் பறித்தல் செய்—நீர் அளி அகில் சந்து அரை - புனலையெடுத்துவார்த்து அகிலையுஞ் சந்தனத்தையும் அரைப்பாயாக—ஆண்டு அவமானம் என்று எண்ணற்க - அவ்விடத்து (அவற்றைப்) பரிபவமென்று நினையாதொழிக. எ - று. (அரு)

ஆயோத னங்கனி மார்பாலு மாற்றியை யன்புடையை
யாயோத னங்கனிற் செய்காசி யாயன்னை யப்பனில்லா
யாயோத னங்கனி யிட்டாளை யம்மையென் றுய்நிற்பெற்ற
வாயோத னங்கனி வாலூட் டினள்கொலவ் வம்மனையே.

இ - ள். கனிமார்பாலும் ஆயோதனம் ஆற்றியை அன்பு உடையையாய் ஓது அநங்கனில் செய் காசியாய் - (போர்க்கெதிரிகளல்லாத)கன்னிமாரிடத்தும்போர்செய்தலையுடைய மன்மதனை (அவன்பால்) அன்பையுடையையாய்ச் சொல்லப்பட்ட உருவிலியாகச் செய்த காசிப்பதியோய்—அன்னை அப்பன் இல்லாய் - நீ தாயுந் தந்தையும் இல்லாதாய்—ஆய் ஓதனம் கனி இட்டாளை அம்மை என்றுய் - (பழுதற) ஆராய்ந்த அன்னமும் மாங்கனியும் (நீ உண்ணப்) படைத்தவளாகிய காரைக்கால்வணிகப்பெண்ணை அம்மைஎன்றுய் [கைலையில் எற்புருவாய்வந்தகாலத்தில் இந்த எற்புடம்பு யாது என்று வினய உமைக்கு அம்மை யென்று விடையளித்தாய்]—அ அம்மனை நின் பெற்ற ஆயோ - அவ்வம்மை உன்னைப்பெற்ற தாயா—தனம் கனிவால் ஊட்டினள் கொல் - (அவள் உனக்கு) முலைப்பாலை அன்பினுற் பருக்கினளோ, பெறுதவிடத்து முலைப்பாலைப் பருக்காவிடத்து அம்மை என்றதற்கு உரிமைவாய்ந்தது எங்ஙனம் என்றபடி. எ - று. தனம்-ஆகுபெயர். (அசு)

அம்மனை யாடு வளவய லின்புண் டவாசிவைகு
மம்மனை யாடு புலிநேர்ந் தெனக்கண்டஞ் சாதெனைக்கா
வம்மனை யாடு கடவிரு மெய்ய வரமகளி
ரம்மனை யாடு மணிமாடக் காசி யரவரனே.

இ - ள். அம் மனையாள் துவள அயல் இன்பு உண்டு - அழகினையுடைய மனைக்கிழத்தி (தன்னைப் பிரிந்து) வாட அயன்மனையில் (வியபசரித்து) இன்பம் நுகர்ந்து—அவாசி

வைகும் அ மனை ஆடு புலி நேர்ந்து எனக் கண்டு அஞ்சாது எனைக் கா - தெற்கின்கண் வாழும் அந்தத் தலைவனுசிய யமனை ஆடு புலியை யெதிர்ப்பட்டாற்போலக் கண்டு பயப் படாவண்ணம் அடியேனைக் காத்தருள்—அம்மனை ஆள் துகள் தவிரும் மெய்ய - உலகமாதாவாகிய பார்வதி (இடப் பால் தனதெனக் கொண்டு) ஆளுகின்ற குற்றம் நீங்கிய திரு மேனியோய்—அரமகளிர் அம்மனை ஆடு மணி மாடம் காசி அர - தெய்வமகளிர் அம்மனைவிளையாடுகின்ற மணிகளிழை த்த மாடங்களையுடைய காசிப்பதியின் வாழும் அரனே—வர னே - மேலோய். எ - று. (அஎ)

அரங்காது வேலை யவளையென் றுய்ச்சி யடிக்குவந்தா
யரங்காது வேலை யுறழ்விழி மோகினி யாகெனுந்துய்
யரங்காது வேலை யிசைகேட்ப தாக்கு மவிமுத்தத்தா
ரரங்காது வேலை விடமருந் தாவிடி னுருய்வரே.

இ - ள். அரங்கா ஐய அளை துவேல் என்ற ஆய்ச்சி அடிக்கு உவந்தாய் அரம் காது வேலை உறழ் விழி மோகினி ஆக எனும் துய்ய - திருவரங்கப்பதியாய் அழகிய தயிரைக் (கள்ளி) உண்ணுதொழி என்று முனிந்த இடைச்சி அடித்த அடிக்கு மகிழ்ந்தாய் (இன்று) அரந்தேய்த்த வேற்படையைப் போலுங் கண்ணையுடைய மோகினியாகுக என்று ஆஞ்ஞா பித்த பரிசுத்தர்—அம் காது வேலை இசை கேட்பது ஆக்கும் அவிமுத்தத்தார் - அழகிய (தமது) காதினது தொழில் இசை யைக்கேட்டலாகச்செய்த காசிப்பதியார்—அரங்காது வேலை விடம் அருந்தாவிடின் ஆர் உய்வர் - அவர் பின்னிடாது கட லிற்றோன்றிய ஆலாகலத்தை (அன்று) உட்கொள்ளாதுவிட் டால் யாவர்தாம் பிழைப்பர். எ - று.

அரத்தைத் தேய்த்தவேலெனினுமாம்; அரங்கா உவந் தாய் ஆக எனக்கூட்டுக. அசுவத்தன் கம்பளன் என்னுமிசை

வல்லோர் கந்தருவர் சிவபிரான் காதுகளிற் குண்டலங்களா யமைந்து இசை பாடிக்கொண்டிருத்தலின் "காதுவேலையிசை கேட்பதாக்கும்" என்றதெனவறிக; அரங்காது என்னும் வினையெச்சம் அருந்தாவிடின் என்பதன்கண் முதனிலை யோடு முடிந்தது. ஆர் உய்வரே என்பதனோடு முடித்துப் பொருள்கோடலும் ஒன்று. அழியாது ஆர்பிழைப்பர் என்றபடி. ஏ - ஈற்றசை. (அஅ)

ஆரணங் காமிக வாய்மயி லாமங்கை யாவெதிர்ந்தா
லாரணங் காமிக வாநிறை யென்ம ரநங்கனம்பா
லாரணங் காமிக ளெய்தவிந் நின்ற வமிழ்தவுரு
வாரணங் காமிகம் வாதுளங் கூறி யவிமுத்தத்தே.

இ - ள். ஆரணம் காமிகம் வாதுளம் கூறி அவிமுத்தத்தே - வேதங்களையும் காமிகம்முதல் வாதுளமிறுதியாகிய ஆகமங்களையும் அருளிச்செய்தவரது காசிப்பதியின்கண்ணே—அநங்கன் அம்பால் காமிகள் ஆ ரணம் எய்த இ நின்ற அமிழ்தம் உரு - மன்மதனது பாணத்தினாற் காமுகர்கள் அந்தோ புண்ணையடையும்படி ஈண்டைக்கண்ணேநின்ற அமிர்தவிக்கிரகம்—ஆர் அண் அம் கா - நிறைந்த அண்ணிய அழகையுடைய பொழிலின்கண்ணே—மிக ஆய் மயிலா மங்கையா - மிக ஆராயத்தக்க மயிலா மானுடமங்கையா (இன்னதென்று பிரித்தறிய வாராது நிறை இகவாத நான் அதனை இகப்பிலாயினேன்)—அணங்கு எதிர்ந்தால் ஆர் நிறை இகவா ஆம் என்மர் - பெண் எதிர்ப்பட்டால் யாரது நிறைதான் அவர் தம்மை இகவாது (உள்ளவண்ணம் உள) தாம் என்று அப்பெண்ணியலறிந்தோர் கூறுப. எ - று.

எனவே இப்பெண்ணமிழ்தவுருவை எதிர்ப்பட்ட நான் நிறை இகந்தது புதிதன்று என்றபடி. (அக)

முத்தரு கந்தர நாண்மதி போற்சங்க மொய்செயவி
முத்தரு கந்தரங் குன்றக்குன் ருக்குன்றர் மோதியுரு
முத்தரு கந்தரம் பந்தித்த சேயை முறையிற்பெற்ருர்
முத்தரு கந்தர சந்திகழ் கான்மலர் மோந்திடலே.

இ - ள். அந்தரம் நாள் மதி போல் முத்து அருகு சங்கம் மொய் செய் அவிமுத்தர் - ஆகாயத்தின்கணுள்ள புதிய சந்திரன்போல முத்துக்களினருகே சங்குகள் நெருங்குகின்ற வயல்சூழ்ந்த காசிப்பதியார்—உகம் தரம் குன்றக் குன்ருக் குன்றர் - உகங்கள் (தமது காலாவதி என்னும்) தகுதி குறைந்தாலுந் தான் குறையாத கைலாயமலையையுடையவர்—மோதி உருமுத் தரு கந்தரம் பந்தித்த சேயை முறையில் பெற்ருர் - தாக்கி இடியைத்தருகின்ற மேகத்தைச் சிறைப்படுத்திய உக்கிரப்பெருவழுதி யென்னுந் திருமகனை முறைமையினுற்பெற்ற பிதா, அவரது—முத்தர் உகந்த ரசம் திகழ் கால் மலர் மோந்திடல்-வீடுபெற்ருரால் விரும்பப்பெற்ற (இன்ப) ரசம் விளங்குகின்ற பாதமலரை மோந்திடுக (எனது கிராணேந்திரியம்) பெத்தருகந்த ஏனைவிஷயரூபமலரை மோக்கற்க என்றபடி. எ - று. உகம் தரங்குன்றுதல்-உகம் அழிதல். (கூ0)

மோதகம் பாகும தீயென்று வேளை முனிந்தசதா
மோதகம் பாகு குழைச்செவி யாயவி முத்தருகன்
மோதகம் பாகு பழமொக்கி யத்த முனைத்தைந்தின்வாய்
மோதகம் பாகு படாதொன்றி நானுனை முன்னலென்றே.

இ - ள். மோ தகு அம்பு ஆகு மதீ என்று வேளை முனிந்த சதா மோதீ - மணக்கத்தக்க (மலர்ப்) பாணங்களையுடையாய் துஷ்டபுத்தியுடையாய் என்று மன்மதனைச் சினந்த சதாநந்த—கம்பு ஆகு குழைச் செவியாய் - சங்காகிய குண்டலத்தையணிந்த செவியாய்—அவிமுத்த - காசிப்பதியாய்—

குகன் மோதகம் பாகு பழம் மொக்கி அத்த - முருகக்கடவுளுக்கும் மோதகம் சர்க்கரை பழம் இவற்றை விழுங்குபவராகிய விநாயகக்கடவுளுக்கும் பிதாவே—ஐந்தின் வாய் முனைத்து மோது அகம் பாகு படாது - ஐம்பொறிகளின் வழியே முற்பட்டுநின்று (விஷயங்களில்) அடிபடுகின்ற (எனது) மனம் அவற்றுற் பிரிவுபட்டொழியாது—ஒன்றி நான் உனை முன்னல் என்று - ஏகாக்கிரமாய் நின்று நான் உன்னைத் தியானித்தல் எந்நாள். எ - று. (சுக)

என்றேக மாயவ னேர்கா விடறின்பக் கானவுணர்
கென்றேக மாயவ கன்றோங்கு நீண்முடி யீசசிவ
வென்றேக மாயவ தித்தெனக் காவலை யான்கைவிடா
வென்றேக மாயவ ணின்னோடு பின்னி யிருப்பதுவே.

இ - ள். என்று அல் மாய ஏக நேர் கா இடறு இன்பம் கான - சூரியன் இருள் தொலையும்படி செல்ல (அவனை) எதிரே சோலை இடறுகின்ற ஆநந்தகானப்பதியாய்—உணர்கு என்றே கம் ஆய அகன்று ஓங்கு நீள் முடி ஈச -(நான்) கண்டறிவேனென்று பிரமா (அன்னமாய்ப் பறந்து) தேட (அவருக்கு எட்டாது) பரந்து உயர்ந்த நீண்டமுடியையுடைய ஈசனே—சிவ - சிவனே—என் தேகம் மாயம் வதித்து எனக் காவலை யான் கைவிடா - எனது உடல் மாயச்சேற்றின்கண்ணது என்று (வெறுத்து அதனது) பாதுகாப்பை நான் கைவிட்டு—அவண் நின்னோடு ஏகமாய்ப் பின்னி இருப்பது என்று - வீட்டுநிலமாகிய ஆண்டு உன்னோடு ஒன்றாய்க் கலந்து வாழ்வது எந்நாள். எ - று. (சுஉ)

இரும்பா னமன மருந்தீமின் ஞேர்க்கலந் தெண்செபிவிர்நீ
யிரும்பானமனமன் றுலவி முத்தத் திறைவன்கட
விரும்பா னமநம வெண்மகக் கீந்தன னென்றுருகா
விரும்பா னமனமக் காணுமி னஃறிணை யேருடைத்தே.

இ - ள். அவிமுத்தத்து இறைவன் - காசிப்பதியின்கண் வாழுந் தலைவன்—நம நம என் மகக்கு இரும் பால் கடல் ஈந்தனன் என்று உருகர் - நமநம என்று அழுத (உபமன் னியுவென்னும்) குழந்தைக்குப் பெரிய பாற்கடலைக் கொடுத் தருளினவன் என்று சொல்லி உருகாத—இரும்பு ஆன மனம் மக்காள் - இரும்பாகிய வன்மனத்தையுடைய மனிதர் காள்—அனம் பானம் அருந்தி மின்னூர்க் கலந்து இரும் - அன்னத்தையும் பானியத்தையுமுட்கொண்டு மின்போல் வாராகிய மகளிரைத்தழுவியிருங்கள்—உம்பால் நமன் அம ன்றல் நீயிர் என் செய்விர் - உம்மிடத்தில் இயமன் (மரண காலத்தில்) நெருங்கினால் நீவிர் யாதுசெய்வீர்—நுமின் அஃ றிணை ஏர் உடைத்து - (பிறவிப்பயன் பெறுதற்குரிய உயர் திணையாய்ப் பிறந்து வைத்தும் அது பெருது விஷயபோகத் தின்மூழ்கிப் பிறவியை வறிதே போக்கிய) நும்மினின்றும் (அப்படிப்பிறவாது மூழ்காது போக்காத) அஃறிணை அழ கையுடைத்து: எ - று. (கூகூ)

உடைய வடிகண் டயன்றேடு சென்னி யுறைதியென்னென்
புடைய் வடிக வுரியனைக் காத்த வொருவர்செம்பட்
டுடைய வடிக ழிடத்தவி முத்த ருலகனைத்து
முடைய வடிக ளருளிய நீபுரி யொண்டவமே.

இ - ள். உடு ஐய - தாரகைகளுக்குத் தலைவனுகிய சந் திரனே—அயன் தேடு சென்னி உறைதி - பிரமாத்தேடிய சிரசின்கண்ணே வீற்றிருக்கின்ருய்—என் - அது என்ன பயன் குறித்தது—என்பு உடைய அடி கவுரியனைக் காத்த ஒருவர் - எலும்பு உடையும்படி அடித்த பாண்டியனைக் கா த்த ஏகநாயகர்—செம் பட்டு உடையவள் திகழ் இடத்து அவிமுத்தர் - சிவந்த பட்டாகிய ஆடையையுடைய பார்வதி விளங்குகின்ற இடப்பாகத்தையுடைய காசிப்பதியார்—

உலகு அனைத்தும் உடைய அடிகள் அருளிய - உலகம் முழுதுமுடைய முதல்வர், அவர் அருளும் பொருட்டு—அடிகண்டு - (அவரது) பாதத்தைக்குறித்து—ஒள் தவம் நீ புரி - ஒள்ளிய தவத்தை நீ செய்யக்கடவாய், அவரது நிலைமேல் வாழும் நினது இற்றைநாள் வாழ்வினும் அவர்சேவடிக்கீழ் வாழுமதுவே தவவாயிலாற்பெறும் பெருவாழ்வென்றபடி. எ - று. (கூச)

தவந்தான மாதரி யாதுனைப் பற்றுந் தமியெனைமந்
தவந்தான மாத கயிலைக்கண் மாளிகைச் சாளரக்க
தவந்தான மாதர் தமக்குத் தடையிற் றயங்கவிமுத்
தவந்தான மாதன்ப னுள்விடு கென்றருள் சாரதர்க்கே.

இ - ள். மாளிகைச் சாளரம் கதவம் தானம் மாதர்தமக்குத் தடையில் தயங்கு அவிமுத்த - மாளிகைகளின்கணுள்ள சாளரக்கதவுகள் சுவர்க்கமகளிருக்குத் தடையாக விளங்குகின்ற காசிப்பதியோய்—தவம் தானம் ஆதரியாது உனைப் பற்றும் தமியெனை - தவமுந் தானமும் என்னும் இவற்றைப் பேணாது நின்னையே உறுதுணையெனப் பற்றிநின்ற தமியேனை—மந்தம் வந்தான் நமாத கைலைக்கண் - (தென்றலாகிய) மந்தமாருதத்தைத் தேராகவுடைய மன்மதன் வணங்கப் பெறாத கைலாயத்தின்கண்ணே—வந்தால் - (நான்) வந்தால்—நமாது அன்பன் உள் விடுக என்று சாரதர்க்கு அருள் - (இவன்) நமது அன்பன் (இவனை) உள்ளேவிடுக என்று (அக்கைலைக்காவலர்களாகிய) தூதர்களுக்கு (ஆஞ்ஞைபண்ணி) அருள். எ - று. (கூரு)

சாரங் கனிந்தன வாணுதற் பார்ப்பதித் தையலிவர்
சாரங் கனிந்தநற் காசிக் கடவுள் சரணமிசைச்
சாரங் கனிந்த கவிமாலை சாத்துசித் தாந்தசைவா
சாரங் கனிந்தனை தீர வொழுகென் றனியுள்ளமே.

இ - ள். சாரங்கன் இந்து அன வாள் நுதல் பார்ப்பதித் தையல் இவர் சார் அங்கன் - விஷ்ணுவும் இளம்பிறைபோலும் ஒளிபொருந்திய நெற்றியையுடைய பார்ப்பதி என்னும் பெண்ணும் இவர் சேர்ந்த சரீரத்தையுடையவர்—இந்த நல் காசிக் கடவுள் - இந்த நல்ல காசிக்கடவுள்—சரணம் மிசைச் சாரம் கனிந்த கவி மாலை சாத்து - (அவரது) பாதத்தின்மேற் சாரங்கனிந்த கவிமாலையைச் சாத்து—சித்தாந்த சைவ ஆசாரம் கல் - சித்தாந்த சைவாசாரத்தைக்கல்—நிந்தனை தீர ஒழுகு - (கற்றவாறே) பழிமொழி தீரும்படி ஒழுகு—என் தனி உள்ளமே - எனது ஒப்பில்லாத மனமே. எ - று. (கூசு)

துனிக்கும் பருவரம் போதியுண் டார்தினந் தாழ்ந்தெழுநா
தனிக்கும் ப்ருவரம் பைபொருங் காசியிற் றண்கமலா
தனிக்கும் பருவரம் பைக்குமிக் காய்நின்மென் றாள்கன்றிவி
தனிக்கும் பருவரற் பாலைப் படர்ச்சி தகுதியன்றே.

இ - ள். தனிக் கும்பர் உவர் அம்போதி உண்டார் தினம் தாழ்ந்து எழு நாதன் - ஒப்பில்லாத கும்போற்பவர் உவர்க்கின்ற சமுத்திரத்தை ஆசமனஞ் செய்தவராகிய அகத்தியமுனிவர் அநுதினமும் நமஸ்கரித்து எழுகின்ற முதல்வனது—இக்கும் பரு அரம்பை பொரும் காசியில் - (சிறுத்த) கரும்பும் பருத்த வாழையை நிகர்க்குங் காசிப்பதியின்கண்—தண் கமல ஆதனிக்கு உம்பர் உ அரம்பைக்கு மிக்காய் - குளிர்ந்த தாமரையாசனியாகிய திருமகளுக்குப் பொன்னுலகின் வாழும் உந்த அரம்பைக்கு உயர்ந்தபெண்ணே—நின் மெல் தாள் கன்றி விதனிக்கும் பருவரல் பாலைப் படர்ச்சி தகுதி அன்று - நினது மெல்லியபாதங் கன்றிவிதனப்படுந் துன்பத்தைத் தருகின்ற பாலைநிலத்தின்கட் செல்லுதல் தகுதியன்று. எ - று. (கூஎ)

அன்று வருந்தியன் மூவர ணீற்று மவிமுத்தத்தை
யன்று வருந்தியம் போருகற் கத்த னருளரிய
தன்று வருந்தியங் காமே வழிபடி னஃதடர்த்தன்
றன்று வருந்திய மாணிக் குயிர்பெற வந்தனையே. ௮

இ - ள். அன்றுவர் உந்து இயல் மூ அரண் நீற்றும் அவிமுத்தத்து ஐயன் - பகைவரது சஞ்சரிக்குந் தன்மையை யுடைய முப்புரங்களையுஞ் சாம்பராக்கிய காசிப்பதியின்கண் வாழுந்தலைவர்—துவர் உந்தி அம்போருகற்கு அத்தன் - சிவந்த உந்திக்கமலத்தையுடைய விஷ்ணுவுக்குப்பிதா—அருள் அரியது அன்று - அவரது அருள் அரியதன்று—வழிபடின் தியங்காமே வரும் - அவரைவழிபட்டால் வருந்தாது அது தானே வரும்—அன்று வருந்திய மாணிக்கு உயிர் பெற அந்தனை அஃது அடர்த்தன்று - அந்நாள் வருந்திய (மார்க்கண்டேயனென்னும்) பிரமசாரிக்கு உயிர் கொன்னே கழியாது கிடைக்கும்படி இயமனை அது வதைத்தது. எ - று. (கூஅ)

தனையனை யானை முகனத்தந் தானைத் தணிகையிற்கந்
தனையனை யானை யிவர்காசி நம்பனைச் சாம்பெருவே
தனையனை யானை யுறுபவத் துன்பந் தழாதவனைத்
தனையனை யானை யிறைஞ்சார் முடையுடல் தாவரமே.

இ - ள். தனையனை ஆனை முகன் ஆத் தந்தானை - (தனது) குமாரனை ஆனைமுகனைப்பெற்றவனை—தணிகையில் கந்தன் ஐயனை - திருத்தணிகையில் வாழுங் கந்தசுவாமிக்குப் பிதாவை—ஆனை இவர் காசி நம்பனை - இடபத்தை ஏறுகின்ற காசிப்பதியில்வாழும் நம்பனை—சாம் பெரு வேதனை - சாதலாகிய பெருந்துன்பம்—அனையால் நையுறு பவம் துன்பம் தழாதவனை - தாயால் வருந்துகின்ற பிறவித்துன்பங் கலக்கப்பெறாதவனை—தனை அனையானை - தன்னைத் தானே நிகர்த்தவனை—இறைஞ்சார் முடை உடல் தாவரமே-

வணங்காரது தூர்க்கந்தத்தையுடைய உடல் தாவரமேயாம். எ - று. (கூகூ)

வரம்பல வாய மலிபொழிற் காசியெம் மான்கணிந்தீ
வரம்பல வாய தளவமன் னுள்பங்கன் மண்ணினல்கும்
வரம்பல வாய வராவவன் றொண்டர் மனைக்கடைய
வரம்பல வாய மணித்திரள் வாம்பரி வாரணமே.

இ - ள். வரம் பலம் ஆயம் மலி பொழில் காசி எம் மான் - உயர்ந்த பழங்களையுடைய மகளிர்கூட்டம் நிறைந்த சோலைசூழ்ந்த காசிப்பதியின்கண் எமது தலைவர்—கண் இந் திவரம் பல் அவாய தளவம் அன்னுள் பங்கன் - கண் கருங் குவளையையும் பல் (கண்டோர்) விரும்பிய முல்லையரும்பை யுஞ் ஒத்த உமாதேவியாரைப் பாகத்திலுடையவர்—மண் ணில் நல்கும் வரம் பல - (அவர் தமது தொண்டருக்குப்)பூமி யிற் கொடுக்கும் வரங்கள் பல—ஆய வரா - அவை இவை என்று எண்ணவரமாட்டா—வரம் பல ஆய மணித் திரள் வாம் பரி வாரணம் அவன் தொண்டர் மனைக் கடைய - அளவுகடந்தனவாகிய இரத்தினக்கூட்டம் தாவுகின்ற குதி ரை யானை இவைகள் அவரது தொண்டருடைய வீட்டுவாயி லிடத்தனவாம். எ - று.

வாய வரா எனக்கொண்டு வாயின் கண்ணனவாய்ச் சொல்லவாரா எனினும் பொருந்தும். (கOO)

காசியமகவந்தாதியுரை முற்றுப்பெற்றது.

---

திருச்சிற்றம்பலம்.

